48-1

Approved by the Text-Book Committee, Madras.
Vide Page 667 Fort. St. George Gazette Part I, B, Dated 24-7-23.

# GEOGRAPHY.

## LOCAL HISTORY & CIVICS OF THE MADURA DISTRICT.



## மதுரை ஜில்லா

பூகோள சாஸ்திரம்

ஜில்லா சரித்திரமும், சிவிக்ஸும் சேர்ந்தது.

BY

N. R. SUBRAMANIA SARMA

Tamil Pandit, High School, Pasumalai.

AND

DEVARAJ MOSES,

Ex-Kindergarten Instructor, Training School, Pasumalai.

E. M. GOPALAKRISHNA KONE,

MADURA, & MADRAS.



1935 [Price 5 As

நான்காம் வகுப்புப்

# பூகோள சாஸ்திரம்

(ஜில்லா சரித்திரமும், சிவிக்ஸூம் சேர்ந்தது.)

## மதுரை ஜில்லா.

சட்டப்படி வேண்டியவைகள் பல சித்திரப்படங்களுடன்
நன்கு விளக்கப்பெற்றுள்ளன.

பசுமலை, உயர்தர கலாசாலை ஆசிரியர்
நெ. ரா. சுப்பிரமணிய சர்மா அவர்களும்
பசுமலை போதனாமுறைக் கலாசாலை
தேவராஜ் மோஸஸ் அவர்களும்
எழுதியது.

துரைத்தனத்தார் அங்கீகரித்தது.



இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்,
மதுரை & சென்னை.
26-ம் பதிப்பு.

 1935 [விலை அணா 5





நமது இந்திய சக்ரவர்த்தியாகிய

# ஐந்தாம் ஜார்ஜ் மன்னர்

## வாழ்த்துப் பாட்டு.

---

'வீடலால' என்ற தேவார மெட்டு.

சக்ரவர்த்தி ஆகும் ஐந்தாம் ஜார்ஜ் மன்னன் வாழ்கவே
மிக்ககீர்த்தி பெற்ற ராணி மேரி என்றும் வாழ்கவே. (1)

மக்கள் சுற்றம் ஆதியோர்கள் மன்னிமேலும் வாழ்கவே
திக்கனைத்தும் போற்றும் இந்திய தேசமென்றும் வாழ்கவே

கப்பமீயும் அரசர் தாமும் கனமிகுந்து வாழ்கவே
ஒப்பில்லாத ஆங்கிலேயர் ஓங்கி ஓங்கி வாழ்கவே (3)

கல்வியோங்க நிதியம்தந்த கருணை வள்ளல் வாழ்கவே
செவ்வாரய ஏழாம் எட்வர்ட்செல்வன் என்றும் வாழ்கவே(4)

அருக்கன் அஸ்த மனமில்லாத அவனிநாதன் வாழ்கவே
உருக்கமாகநம்மையாளும் உளத்தன் ஜார்ஜு வாழ்கவே (5)

# முகவுரை.

---

இராமநாதபுரம் ஜில்லா எற்பட்ட பிறகு, புதிய மதுரா ஜில்லாவைப்பற்றிய புதிய சட்டத்திற்கு எற்பட்டபடி முதலில் யாமே எழுதினோம்.

இதில், ஸ்கேலின்படி படம் எழுதும் விதத்தை உதாரணத்துடன் நன்றாய் விளக்கியிருக்கிறோம். அதை விளக்குகையில் உபாத்தியாயர் பிள்ளைகளுக்கு ஸ்கேல் முதலிய வற்றைக் கொடுத்து, இப்புத்தகத்திற் காட்டிய படியே பிளான் எழுதும் முறையைக் கற்பிக்கவேண்டும். தெரிந்த விஷயத்தைக்கொண்டு தெரியாத விஷயங்களைக் கற்பித்தலே முறையாதலால், பள்ளிக்கூடம் இருக்கும் கிராமத்தைப்பற்றிக் கற்பித்தபின்னரே உபாத்தியாயர் ஜில்லாவைப்பற்றிக் கற்பிக்கவேண்டும். பூகோள சம்பந்தமான பதங்களை விளக்குகையில் உபாத்தியாயர் பிள்ளைகளுடன் வெளிப்பக்கங்களில் போய், அங்குள்ள விஷயங்களைக் கவனிக்கச் செய்ய வேண்டும். நிற்க,

இந்த ஜில்லாவின் இயற்கை அமைப்பின்படி நிலவகைகளைப் பிரித்து, அவை ஒவ்வொன்றிலும் உண்டாகும் பொருள்களை நன்றாய்க் காட்டி இருக்கிறோம்.

ஸ்கேல் விபரம், பூமி, படம் இவற்றின் திசைகள், பூமியின் உருவம், பூகோள சம்பந்தமான பதவிளக்கம், ஜில்லாவின் இயற்கை அமைப்பு, பெரியாறு பிராஜெக்ட், ராஜாங்கப் பிரிவினை இவற்றை விளக்குவதற்குப் படங்களைச் சேர்த்தும், ஜில்லாவின் சரித்திரம், துரைத்தன விளக்கம், சில இடங்கள் சம்பந்தமான கதைகள் ஆகிய இவற்றைக் கூட்டியும் முன்பதிப்புகளை வெளியிட்டோம். இப்பதிப்பில் பொது விபாத்தை விரித்தெழுதி நன்கு விளக்கி இருப்பதோடு அதற்கு அவசியமான புதுப் படங்களையும் சேர்த்திருக்கிறோம்.

நே. ரா. சு. & தே. மோ.

# பொருளடக்கம்

முக்கிய பட்டணங்கள்.



ஜில்லா சரித்திரம்.



நாயக்கர்கள்

# நான்காம் வகுப்புப்
# பூகோள சாஸ்திரம்

---

## நான்கு திசைகள்.

நமக்குக் கைகள் எத்தனை? அவற்றில் எந்தக் கை எழுத உபயோகப்படுகிறது? எந்தக் கை உணவை எடுத்துச் சாப்பிட உதவுகிறது? எந்தக்கை பெரியோர்களிடமிருந்து ஏதேனும் ஒரு பொருளை வாங்குகிறது? வலது கை அல்லவா? இன்னொரு கையை நாம் எந்தக் கை என்கிறோம்? இடது கை என்கிறோம். உங்கள் பக்கத்திலிருக்கும் பையன் யார்? பொருள்கள் எவை? என்று கேட்டால் என்ன சொல்லுவீர்கள்? உங்களுக்கு வலதுக்கைப் பக்கம் அல்லது இடதுகைப் பக்கம் இருக்கிறது என்பீர்கள். உங்கள் வலப்பக்கம் இருக்கும் பையன் யார்? இடப்பக்கம் இருக்கும் பையன் யார்? உங்களுக்கு முன்பக்கமும் பின் பக்கமும் எவை உள்ளன? நாம் இப்போது அறிந்த வலப்பக்கம், இடப்பக்கம், முன்பக்கம், பின்பக்கம் என்பன எக்காலத்தும் ஒரே நிலை பெற்றனவாய் இல்லை. அது எப்படி என்று பார்ப்போம். உங்களில் இருவர் ஒரே வரிசையில் நின்றால், ஒருவனுடைய வலப்பக்கம் மற்றவனுக்கு இடப்பக்கம் அல்லவா? அப்படியே ஒருவனுடைய இடப்பக்கம் மற்றவனுக்கு வலப்பக்கம் ஆகிறது. எனவே வலப்பக்கமும் இடப்பக்கமும் நிற்கும் நிலைமைக்கு ஏற்றபடி மாறுகின்றன. இவ்விதம் நிலைமைக்கு ஏற்றவாறு மாறுபடாமல், எல்லாருக்கும் ஒரே மாதிரியான பக்கங்கள் உண்டு. அவற்றுக்குத்தான் திசைகள் என்று பெயர்.

# திசைகள்.






## பூமியின் திசைகளை அறிதல்.

அதிகாலையில் நீங்கள் எழுந்திருந்தால், வரவர இருட்டுக் குறைந்து, வெளிச்சம் வரக் காண்பீர்கள். இவ் வெளிச்சத்திற்குக் காரணம் என்ன? சூரியன் உதிப்பதே.

எந்தத் திசையில் சூரியன் உதிக்கிறதோ, அந்தத் திசை தான் கிழக்கு. சூரியன் ஏறி வரவர வெளிச்சம் அதிகரிப்பதை நீங்கள் காண்கிறீர்கள். நடுமத்தியானம் 12 மணிக்குச் சூரியன் எவ்விடத்தில் காணப்படுகிறது பாருங்கள். மாலை வேளையில் நீங்கள் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்புகையில் வரவர வெளிச்சம் குறைந்து இருட்டு மூடுவதையும் பார்ப்பீர்கள். அந்த மாலை வேளையில் சூரியன் அஸ்தமிக்கும் திசையே மேற்கு. சூரியன் உதித்திருக்கையில் நீங்கள் சூரியனை நோக்கி நிற்கும் பொழுது உங்கள் வலது கைப்பக்கம் இருக்கும் திசை தேற்கு. இடது கைப்பக்கம் இருக்கும் திசையே வடக்கு ஆகும். இத்திசைகள் எவர்க்கும் மாறுபடாமல் நிலையாய் இருக்கின்றன அன்றோ?




## படத்தின் திசைகளை அறிதல்.

பூமியின் திசைகளை அறியும் வகையை நீங்கள் தெரிந்து கொண்டீர்கள். ஆனால் படத்தில் திசைகளை அறிவது எப்படி? உங்கள் பள்ளிக்கூடத்தில் ஒரு பூகோளப் படம் சுவரில் தொங்கவிட்டிருப்பதாக வைத்துக்கொள்ளுங்கள். அதற்கு எதிரே நீங்கள் நின்றால், உங்கள் தலைப் பக்கம் அதாவது படத்தின் தலைப்பக்கம் வடக்கு, அடிப் பக்கம் தெற்கு, உங்கள் வலதுகைப் பக்கம் கிழக்கு, இடது கைப் பக்கம் மேற்கு என்று தெரிந்து கொள்ளுங்கள். எந்தப் பூகோளப் படத்திலும் திசைகள் இந்த முறைப்படியே மாறாமல் குறிக்கப்பட்டிருக்கின்றன. இந்த விஷயத்தை மேலே காட்டிய படத்திற் பாருங்கள்.

## எட்டுத்திசைகள்.

இதுவரையில் கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என்ற நான்கு திசைகளைப் பற்றி அறிந்தீர்கள். இவற்றைத் தவிர உபதிசைகள் அல்லது கோணத்திசைகள் என்று வேறு திசைகளும் உள்ளன. அவற்றைப்பற்றி இங்கேசொல்வோம்.




காலையில் நாம் சூரியனைப் பார்த்து நின்றால், கிழக்குத் திசையைப் பார்க்கிறோம். இந்தத்திசைக்கும் நமது வலதுகை குறிக்கும் தெற்குத் திசைக்கும் சமமத்தியில்உள்ள உபதிசைக்குத் தென்கிழக்கு என்று பெயர். தெற்குக்கும் மேற்குக்கும் நடுவிலுள்ளது தென்மேற்கு. மேற்குக்கும் வடக்குக்கும் மத்தியிலுள்ளது வடமேற்கு. வடக்குக்கும் கிழக்குக்கும் மத்தியிலுள்ளது வடகிழக்கு எனப்படும். எனவே இப்போது நாம் அறிந்த உபதிசைகள் நான்கும், முன்பு அறிந்த திசைகள் நான்கும் சேர்ந்து எட்டுத் திசைகள் ஆகின்றன. இந்தத் திசைகளன்றிப் பூமிக்கு மேல், கீழ் என்ற இரண்டு திசைகளும் உண்டு.

அப்பியாசம்:—வடக்கிலிருந்து ஆரம்பித்து உபதிசைகளை விடாமல் வரிசையாகச் சொல்லு. வடகிழக்கு நேர் எதிராக உள்ள திசையின் பெயர் என்ன?

## நக்ஷத்திரங்களும், திசைகளும்

பகலில் சூரியனை வைத்துத் திசைகளை அறிகிறோம். சூரியன் இரவில் தெரிவதில்லை. அப்போது ஏதேனும்

ஒரு புது இடத்திற்குச் சென்றால் அங்குத் திசைகளை எப்படி அறிவது? அதற்கு ஒரு உபாயம் உண்டு.

இரவில் வானத்தைப் பார்த்தால், பல நக்ஷத்திரங்கள் மின்னிக்கொண் டிருப்பதைக் காணலாம். அவை பகலில் நமது கண்ணுக்குப் புலப்படா. ஏனெனில் சூரிய வெளிச்சத்தில் ஒரு விளக்கை வைத்தால் அது மங்கிக் காணப்படுகிறதுபோல, அதிகமான சூரிய வெளிச்சத்தில் நக்ஷத்திரங்களின் ஒளி மங்கி விடுகின்றன. இரவில் சூரிய வெளிச்சம் இல்லாததால் அவை நன்கு தெரிகின்றன.

இரவில் ஒரு மைதானத்திற் சென்று ஆகாயத்தில் எல்லாப் பாகத்திலும் நன்கு கவனித்துப் பாருங்கள். ஒரு திசையில் இப்படத்தில் காட்டி யிருப்பது போல், ஒரு நக்ஷத்திரக் கூட்டம் காணப்படும். அக்கூட்டத்தில் ஒரு நக்ஷத்திரம் பெரிது, அதன் சமீபத்தில் வேறு நக்ஷத்திரங்கள் படத்திற் காட்டியபடி உண்டு. அந்தப் பெரிய நக்ஷத்திரத்துக்குத் துருவநக்ஷத்திரம் என்று பெயர். இந்த நக்ஷத்திரம் எப்போதும் மாறாமல் வட திசையிலேயே காணப்படும். ஆகவே இந்தத் துருவ நக்ஷத்திரம் காணப்படும் திசை வடக்கு. இதை அறிந்தால் மற்ற திசைகளை இலகுவாய் அறியலாம். நாம் துருவ நக்ஷத்திரத்தை நோக்கி நின்றால் நமது பின்புறம் உள்ள திசை எது? வலப்பக்கம் உள்ள திசை எது? இடப்பக்கம் உள்ள திசை எது?



## திசை அறி கருவி. (Compass)

இது வரையில் நாம் திசைகளை இரவிலும் பகலிலும் அறியும் விதத்தைத் தெரிந்து கொண்டோம். இந்த மாதிரி சில சமயங்களில் கண்டு பிடிக்க முடியாது. ஒரு சமயத்தில் பகலில் சூரியனையும், இரவில் நக்ஷத்திரங்களையும் இருண்ட மேகம் நன்றாய் மறைத்துவிடும். அப்போது நாம் திசைகளை அறிவது எப்படி?



எந்த நோத்திலும் எந்த இடத்திலும் திசை அறிவதற்கு ஒரு இயந்திரம் இருக்கிறது. காந்த ஊசி என்று ஒரு வஸ்து உண்டு, அது இரும்பை இழுக்கக் கூடியது. அதன் ஒரு நுனியில் ஓர் அடையாளம் இடப்பட்டிருக்கும். இந்த ஊசியின் நடுவில் ஒரு கயிற்றைக் கட்டித் தொங்கவிட்டால் அடையாள முள்ள நுனி எப்போதும் வடதிசையையே காட்டி நிற்கும். அதை நாம் எப்படி அசைத்துவிட்டாலும், அது ஆடி ஆடித் திரும்பி ;அதன் அடையாளமுள்ள நுனி, வட திசையை நோக்கியே நிற்கும். வட திசையை நாம் அறிந்தால் பிறதிசைகளை அறிதல் சுலபம். காந்த ஊசியின் ஒரு நுனி வடக்கே நோக்கி இருக்குமென்பதைக் கண்டீர்கள். இந்தக் குணமுள்ள ஊசியால் நமக்குப் பலநன்மைகள் உண்டு. அதை வைத்துச் செய்யப்பட்ட ஒரு கருவியால் எந்த நோத்திலும் எந்த இடத்திலும் நாம் திசைகளைச் சுலபமாய் அறிந்துகொள்ளலாம்.




கைக்காம்பஸ் என்பது ஒரு கைக்கடிகாரம்போல் இருக்கும். அதன் உருவத்தைப் பக்கத்தி லுள்ள படத்திற் பாருங்கள். கெடி காரம் காலம் காட்டும். காம்பஸ் திசைகளைக் காட்டும். கைக்கெடி காரத்தில் நேரம் காட்டும் கரு விக்கு முள் என்று பெயர். காம் பஸில் திசை காட்டும் கருவிக்கு ஊசி என்று பெயர்.

காம்பஸின் பாகங்கள்.

1. பெட்டி—இதற்குள்ளேதான் காந்த ஊசி கெட் டுப்போகாமல் வைக்கப்பட்டிருக்கிறது.

2. கண்ணுடி அல்லது மூடி—கெடிகாரத்தில் மணி பார்க்கும் பாகத்தையும் முள்ளையும் கண்ணுடி மூடியிருப் பதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அதைப் போலவே காம்பஸின் ஊசியைக் கண்ணுடியானது மூடியிருக்கும். காந்த ஊசியும் அது காட்டும் திசையும் தூசி அடைந்து போகாமல் அல்லது வேறு விதமாகக் கெட்டுப் போகாமல் கண்ணுடி பாதுகாக்கிறது.

3. காந்தஊசி—இதுவே திசைகளைக் காட்டுகிறது.

4. விசிறி முளை—அக்கருவியின் மத்தியில் இருக்கும். இதன்மேலே தான் காந்த ஊசி நிற்கிறது.

5. பெட்டியின் அடி—ஊசியின்கீழுள்ள இவ் அட்டை யில் முக்கியமான நாலு திக்குகளும் 4. உப திக்குகளும் வரையப்பட்டிருக்கின்றன.

## சித்திரம் நிலப்படம். (பிளான்.)

நீங்கள் பல சித்திரங்களை உங்கள் புஸ்தகத்தில் பார்த் திருக்கிறீர்கள். உதாரணமாக, மனிதர்கள், மிருகங்கள், மரங்கள், வீடுகள், பாத்திரங்கள் முதலியவற்றைப் பார்த் திருப்பீர்கள். ஒரு ரூபாவையும் பார்த்திருப்பீர்கள். அதன்

உருவப்படம் அல்லது சித்திரம் இப்பக்கத்திலுள்ள படத்தில் இருக்கிறது. அதில் என்ன என்ன பார்க்கிறீர்கள்? நமது சக்கரவர்த்தி உருவமும் சில எழுத்துக்களும் உள்ளன. இனி ஒரு ரூபாவை எடுத்துத் தரை மேல் வைத்து அதைச் சுற்றிக் குச்சியால் கோடு வரையுங்கள்.






இப்போது ரூபாவைச் சுற்றி வரைந்த வட்டம் ரூபாவின் சித்திர மன்று. சித்திரம் என்றால் அதில் முன்போல் உருவமும் எழுத்துக்களும் இருக்க வேண்டும். அவை நீங்கள் எழுதிய படத்தில் இல்லை. ரூபாவைச் சுற்றித் தரையில் வரைந்த படம் ரூபாவின் தரைப்படம் அல்லது நிலப்படம் அல்லது பிளான் என்று சொல்லப்படும்.

உங்கள் புஸ்தகத்தைக் கற்பலகையின் மேல் வைத்து அப் புஸ்தகத்தின் ஒரு ஓரத்தை ஒட்டி ஒரு கோடு வரையுங்கள். அது அப் புஸ்தகத்தின் ஒரு பக்கத்து அளவைக் காட்டுகிறது. அந்தக் கோட்டின் தொடர்ச்சியாய்ப் புஸ்தகத்தை ஒட்டியே இன்னொரு பக்கத்திற் கோடு போடுங்கள்.



அதேமாதிரி மற்ற இரண்டு பக்கங்களிலும் வரையுங்கள். இனிப் புஸ்தகத்தை எடுத்துவிட்டால் கற்பலகையில் வரைந்த நான்கு கோடுகளும் ஒரு உருவத்தைக் காட்டுகின்றன. அவ்வுருவத்துக்குப் புஸ்தகத்தின் பிளான் அல்லது **தரைப்படம்** என்று பெயர்.

## ஸ்கேல் விபரம்.

தரைப்படம் அல்லது பிளானில் வஸ்துவின் நீளமும் அகலமும் தான் தெரியும். முன்னெழுதிய புஸ்தகத்தின் பிளான், புஸ்தக அளவு உள்ளபடியே நீங்கள் எழுதிய பிளான். உங்கள் கற்பலகையைவிடப் பெரிய வஸ்துவின் பிளானை உள்ளபடியே உங்கள் கற்பலகையில் எழுத முடியுமா? முடியாது. அதற்கு என்ன செய்வீர்கள்?

எந்தப் பொருளின் பிளானை நீங்கள் வரைய விரும்புகிறீர்களோ அதன் நீளத்தையும் அகலத்தையும் சமமாகக் குறைத்து உங்கள் கறுப்புப் பலகையிலாவது, பெரிய காகிதத்திலாவது வரைந்து விடலாம்.

ஒரு வஸ்துவின் நீளத்தை நீங்கள் எவ்வாறு கண்டுபிடிப்பீர்கள்? அதை அளந்து பார்த்தால் தெரியும் அல்லவா? எதனால் அளப்பது? கையாலும் பாதத்தாலும் அளந்து சொல்லலாம். ஆனால் எல்லாருடைய கைகளின் அளவும் பாதங்களின் அளவும் ஒத்து இராது. எப்போதும் ஒரே அளவை வித்தியாசம் இல்லாமல் காட்ட அளவுகோல்கள் ஏற்பட்டிருக்கின்றன. உங்களில் ஒவ்வொருவரும் ஒரு அளவுகோல் வைத்திருக்கிறீர்கள் அல்லவா? அது ஒரு அடி என்ற அளவைக் காட்டுங் குச்சி. அதை அடிக்குச்சி என்று சொல்லுகிறீர்கள். இந்தக் குச்சியால் எந்தவஸ்துவின் நீளத்தையும் அகலத்தையும் அளக்கலாம்.

முதலில் ஒரு துணியை எடுத்துக்கொண்டு அது எத்தனை குச்சி நீளம். எத்தனை குச்சி அகலம் என்று அளந்து பார்த்துச் சொல்லுங்கள்.

இப்போது அடிக்குச்சியை எடுத்துக் கவனியுங்கள். ஒருஅடி என்பது 12 அங்குலம் என்று உங்களுக்குத் தெரியும். நீங்கள் எடுத்துக்கொண்ட அக்குச்சியை 12 பாகங்களாகப் பிரித்துக் காட்டியிருக்கிறதை அதிற் பாருங்கள். நீங்கள் இப்பொழுது எந்தப்பெரிய பொருளை அளக்க விரும்புகிறீர்களோ, அதன் நீளம் அகலம் அடிக்கணக்கில் இருப்பதைக் குறைத்து முதலில் அங்குலக் கணக்காக மாற்றிக்கொள்ளலாம்.

உதாரணமாக, ஒரு அறையின் நீளத்தையும் அகலத்தையும் அளந்து சொல்லுங்கள். 36 அடி நீளமும் 20 அடி அகலமும் இருக்கிறதாக வைத்துக் கொள்ளுங்கள். இந்த நீளமும் அகலமும் உள்ள பிளானை; அந்த அறையின் அளவின்படி உங்கள் கற்பலகையில் வரையமுடியுமா? முடியாது. இனி அறையின் பிளானை வரைய வேண்டுமானால் உங்கள் அடிக்குச்சியின் ஒவ்வொரு அடியையும் ஒரு அங்குலமாகப் பாவித்து முதலில் கறுப்புப் பலகையில் **(Black Board)** பிளானை எழுதுங்கள். அப்போது அறையின் நீளமாகிய 36 அடி 36 அங்குலமாகவும், அகலமாகிய 20 அடி 20 அங்குலமாகவும், கறுப்புப் பலகையில் எழுதிய பிளானில் அமையும்.

இனி உங்களுடைய கற்பலகையிலும் அறையின் பிளானை வரையலாம். எப்படியெனில், அறையின் ஒவ்வொரு அடியும் ¼ அங்குலமாகப் பாவித்து எழுதுங்கள். இப்போது அறையின் நீளமாகிய 36 அடியானது 9 அங்குலமாகவும் அகலமாகிய 20 அடியானது 5 அங்குல மாகவும் கற்பலகையில் அமையும்.

அப்படியே 10 அடியை ஒரு அங்குலமாகவும், 100 அடியை ஒரு அங்குலமாகவும் வைத்துப் பிளான் எழுதலாம். இவ்வாறே சிறிய உருவத்தைப் பெரிய அளவிலும் எழுதலாம். இப்படி எழுதுவதற்குத் தான் 'ஸ்கேலின்படி தரைப்படம் எழுதல்' என்று பெயர்.

இப்படியே ஒரு பள்ளிக்கூடத்தின் தரைப்படத்தையும் வரையலாம். முதலாவது காம்பவுண்டுச் சுவர்களை நாம் வரையவேண்டும்; அவற்றின் நீளமும் அகலமும் நமக்கு முதலில் தெரியவேண்டுமல்லமா? அளந்து பார்த்தால் தென்வடல் நீளம் 200 அடி, கிழமேல் அகலம் 140 அடி இருக்கின்றன என்று வைத்துக்கொள்வோம். 40 அடிக்கு ஒரு அங்குலம் ஸ்கேல் வைத்தால் நீளமாகிய 200 அடி 5 அங்குலமாகப் பிளானில் அமையும். அப்படியே அகலமாகிய 140 அடி $3\frac{1}{2}$ அங்குலத்தில் அமையும். 5 அங்குலம் தென்வடல் நீளமும், $3\frac{1}{2}$ அங்குலம் கிழமேல் அகலமும் உள்ள ஒரு நீண்ட சதுரம் எழுதுக. இப்படி எழுதும்போது பள்ளிக்கூடத்தின் வடபக்கம் பிளானில் தலைப்பக்கத்திலும், தென்பக்கம் பிளானில் அடிப்பக்கத்திலும் அமையவேண்டும். காம்பவுண்டின் தெற்குச் சுவரில் 20 அடி அகலமுள்ள ஒரு வாசல் மத்தியில் இருப்பதாக வைத்துக்கொள்வோம். அந்த வாசலைக் குறிக்க ஸ்கேல்படி அரை அங்குலக் கோட்டை மத்தியில் அழித்துவிடுங்கள். காம்பவுண்டுச் சுவரில் கனத்தைக் குறிக்கு முன் எழுதின கோட்டைச் சுற்றி மற்றொரு கோடு வரையுங்கள். கனத்தையும் ஸ்கேலின்படி வரையவேண்டும்.

இனி வகுப்பறைகளின் பிளானை வரைவோம். முதலில் காம்பவுண்டின் வடக்குச் சுவருக்கும் பள்ளிக்கூடத்துக்கும் எவ்வளவு தூரம் இருக்கிறதென்று அளக்கவேண்டும்.

அப்படி அளந்ததில் 40 அடி இருக்கிறது. பள்ளிக்கூட வடக்குச் சுவரின் நீளம் 120 அடி. அப்படியாயின், பள்ளிக்கூட வடக்குச் சுவரிலிருந்து ஒரு அங்குலத்திற்குத் தெற்கே, 3 அங்குல நீளமுள்ள ஒரு கோட்டைக் கிழமேலாக வரையவேண்டும். இப்போது பள்ளிக்கூடத்து வடக்குச் சுவர் எழுதிவிட்டோம். இனிக் கிழக்கு மேற்குச் சுவர்களை அளக்கவேண்டும். அவை ஒவ்வொன்றும் 120 அடி நீளமுள்ளது. முன்வரைந்த கோட்டின் ஒரு நுனியிலிருந்து தெற்காக 3 அங்குலக் கோடு ஒன்று வரையுங்கள். இதுபோலவே மற்ற கோட்டிலிருந்து வேறொரு 3 அங்குலக் கோடு வரையுங்கள். இப்போது பள்ளிக்கூடத்துக்குக்கிழக்கு வடக்கு மேற்குச் சுவர்களை வரைந்தோம். இனிமேல் ஒவ்வொரு அறையின் நீளமும் அகலமும் தெரியவேண்டும். அளந்ததில் ஒவ்வொரு அறையும் 60 அடி நீளமும் 30 அடி அகலமும் உள்ளது. முதலில் பள்ளிக்கூடத்தின் கிழக்குச் சுவருக்கு மேற்குப்பக்கத்தில் $\frac{3}{4}$ அங்குல நீளத்தில் மேலேயிருந்து ஒரு கோடு போடுங்கள். அதுபோலவே மேற்குச் சுவருக்குக் கிழக்குப்பக்கத்தில் ஸ்கேல்படி $\frac{3}{4}$ அங்குல அகலத்தில் 3 அங்குல நீளத்தில் ஒரு சமதூரக் கோடு வரையுங்கள். இனிமேல் தெற்குச்சுவரைக் காட்டக் கிழக்கு நுனியையும் அதன் அடுத்த கோட்டின் நுனியையும் சேருங்கள். அதுபோலவே மேற்குப் பக்கத்திலுள்ள கோட்டின் நுனியையும் அதற்குக் கிழக்கே $\frac{3}{4}$ அங்குல சமதூரத்தில் வரைந்த கோட்டின் நுனியையும் சேருங்கள்.

ஒவ்வொரு அறையின் நீளமும், அகலமும் முன்னமே நமக்குத் தெரியும். முன் வரைந்த ஸ்கேல்படி 3 அங்குல நீளமுள்ள கிழக்குக் கோட்டின் மத்தியிலிருந்து அடுத்த சமதூரக் கோட்டின் மத்திக்கு ஒரு கோடு குறுக்கே எழு

துங்கள். அதே மாதிரி மேற்குப் பக்கத்திலுள்ள கோட்டின் நடுவிலிருந்து அதையடுத்த கோட்டுக்குக் குறுக்கே ஒரு கோடு வரையுங்கள். இப்போது கிழக்குப் பக்கத்தில் இரண்டு அறைகளும் மேற்குப் பக்கத்தில் இரண்டு அறைகளும் வரைந்தோம். இனி வடக்குப் பக்கத்து அறையைக் காட்ட வடக்குச் சுவரிலிருந்து $\frac{3}{4}$ அங்குல அகலத்திலும் $1\frac{1}{2}$ அங்குல நீளத்திலும் கிழக்கு மேற்காக இருக்கும் அறைகளைக் குறிக்கும் சுவர்வரையில் ஒருகோடு போடுங்கள். இப்போது பள்ளிக்கூடத்தின் அறைகளை யும் எழுதிவிட்டோம்.

சுவர்களின் கனத்தைக் காட்ட முன் வரைந்த எல்லாக் கோடுகளையும் ஒட்டிச் சமதூரக்கோடுகள் வரையுங்கள். சுவரின் கனத்தை அளந்து ஸ்கேல்படி எழுதவேண்டும். கதவுகள் இருக்கும் இடத்தையும் அதன் அகலத்தையுங் குறிக்க அந்தந்த இடங்களில் ஸ்கேல்படி கோடுகளை அழித்துவிடுங்கள். அப்படியே ஜன்னல்களைக் காட்ட அந்தந்த இடத்தில் குறுக்கே கோடு போடுங்கள். இப்போது பள்ளிக்கூடத்தை அளந்து அதன் பிளானை வரைந்தோம்.

## கிராம நிலப்படம்.

இப்படியே உங்கள் கிராமத்தின் நிலப்படத்தையும் எழுதலாம். அதற்கு முதலில் அந்தக் கிராமத்திலுள்ள வீடுகள், தெருக்கள், கோவில்கள், வயல்கள், ஏரி குளங்கள், நதி முதலியவை எங்குள்ளவை என்று பார்க்கவேண்டும். பிறகு அவற்றை அளந்து ஸ்கேலின்படி எழுத வேண்டும். அப்படி அளந்து எழுதுவதற்குப் பல நாட்கள் ஆகும். இங்ஙனம் தயாரித்த கிராமப்படம் உங்கள் பள்ளிக்கூடத்தில் இருக்கிறது. ஒவ்வொரு கிராமத்தின் படமும் துரைத்தனத்தாரால் தயார் செய்யப்பட்டிருக்கிறது. அதைப்

பார்த்து உங்கள் கிராமத்தின் படத்தை எழுதுங்கள். அதில் குறித்த ஸ்கேலைப் பார்த்துக் கிராமத்தின் நீளம் அகலம் எல்லைகள் என்பவைகளை எழுதுங்கள்.

உங்கள் கிராமம் போன்ற பல கிராமங்கள் சேர்ந்த தாலூகா, பல தாலூகாக்கள் சேர்ந்த ஜில்லா முதலியவற்றையும் முன் சொன்னபடி எழுதியிருக்கின்றார்கள். இவற்றுக்குப் பூகோளப்படங்கள் என்று பெயர்.

கிராமத்தைப் பார்க்கிலும் பெரிய பூகோளப் படங்களை எழுதும்போது, சிறு கிராமங்கள், பட்டணங்கள் முதலியவற்றைப் படத்தில் விபரமாக எழுத முடியாதல்லவா? அவற்றைக் குறிப்பதற்குக் கிராமங்கள், பட்டணங்கள் உள்ள இடத்தில் சிறு புள்ளிகளை எழுதிக் குறித்திருக்கிறார்கள். மலைகள், நதிகள், ரஸ்தாக்கள் முதலியவைகளும் வெவ்வேறு விதமான குறிகளால் படங்களில் குறிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றை உங்கள் ஜில்லாப் படத்திற் பார்த்துத் தெரிந்துகொள்ளலாம்.

இங்ஙனம் பல ஜில்லாக்கள் சேர்ந்தது ஒரு ராஜதானி, பல ராஜதானி சேர்ந்தது ஒரு தேசம், பல தேசங்கள் சேர்ந்தது ஒரு கண்டம். இப்படிப் பல கண்டங்கள் சேர்ந்ததுதான் இப் பூமி என்று தெரிந்துகொள்ளுங்கள்.

## பூமியின் உருவம்.

பூமியின் உருவம், அமைப்பு, தரையின்மேடு பள்ளம், விளைபொருள் முதலிய விஷயங்களைப்பற்றிக் கற்பிக்கும் புஸ்தகத்திற்குப் 'பூகோள சாஸ்திரம்' என்று பெயர். நாம் வசிக்கும் இந்தப் பூமியானது எலுமிச்சம்பழம்போல் உருண்டையாயிருக்கிறது. ஆனால் பார்வைக்குத் தட்டையாகத் தோன்றுகிறது. ஏனெனில் பூமி முழுவதையும்

ஒரே தடவையில் நாம் பார்க்க முடியாததால் அவ்வாறு தோற்றுகிறது. ஆனால் உண்மையில் பூமி உருண்டை யாகத்தான் இருக்கிறது. உதாரணமாக,



பக்கத்தில் உள்ள படத்தில் காட்டியபடி ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் போய்க்கொண் டிருக்கும் கப்பலை நீங்கள் பார்த்தால், முதலில் அந்தக்கப்பலின் அடிப் பாகமும், அக்கப்பல் தூரப் போகப் போக மேற்பாகங்களும் கொஞ்சங் கொஞ்சமாய் மறையக் காண்பீர்கள். பூமி உருண்டையாய் இல்லாமல் தட்டையாய் இருந்தால் அடிப்பாகம் மறையக் காரணம் இல்லை.



நாம் வசிக்கும் உருண் டை வடிவமாகிய இந்தப் பூமி மூன்று பங்கு நீரா லும், ஒரு பங்கு நிலத்தா லும் ஆகியது.

## பூமி, சூரியன் சந்திரன்.

நாம் வசிக்கும் இப்பூமியானது 25000 மைல் சுற்றள வுள்ளது. அதன் குறுக்களவு 8000 மைல். இப்பூமி மேற் குத் திசையிலிருந்து கிழக்குத்திசையில் சுழன்றுகொண்டு போவதால், சூரியன் கிழக்கில் உதித்து மேற்கில் அஸ்தமிக் கிறதாய்க் காணப்படுகிறது. உண்மையில் பூமிதான் சுற்று கிறது. சூரியன் இருந்த இடத்திலேயே இருக்கிறது. நாம் புகைரதம் ஏறிப் பிரயாணம் போனால், நாம் செல்லும்

திசைக்கு எதிர்த்திசையை நோக்கி மரங்கள், குன்றுகள் முதலியன செல்வனபோல் காணப்படுகின்றன அல்லவா? ஆயினும் புகைரதந்தான் ஓடுகிறதென்று நமக்குத் தெரியும். அதுபோல் பூமி வேகத்துடன் சுழலுவதால் அதன் அசைவு நமக்குப் புலப்படாமல் சூரியன் கிழக்கில் உதித்துப் பூமி சுழலும் திசைக்கு எதிர்த்திசையாகிய மேற்குப் பக்கம் போவதுபோல் காணப்படுகிறது. பூமி சுழன்றால் அதிலுள்ள ஜனங்கள், வீடுகள் முதலிய எல்லாப் பொருள்களும் கீழேவிழாமலிருக்குமா என்று நீங்கள் நினைக்கலாம். பூமி என்ற கோளத்துக்கு மற்றுமுள்ள கோளங்களைப் போலவே, சமீபத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் தன் மத்தியபாகத்திற்கு இழுத்துக் கொள்ளும் வல்லமை இருக்கிறது. அந்த வல்லமையை ஆகர்ஷணசக்தி என்பார்கள். அந்தச் சக்தி பூமிக்கு இருப்பதினால் ஆகாயத்தில் நாம் எதை எறிந்தாலும் முடிவில் அது பூமியில் வந்து விழுகிறது. இந்தச் சக்திதான் பூமி சுழலும்போது அதைச் சேர்ந்த பொருள்களை விழாமல் தன்னோடு இழுத்துக் கொண்டே செல்கிறது.

பூமிக்கு இரண்டுவித சலன்ங்கள் (அசைவுகள்) உண்டு. பம்பரம்போல் தன்னைத்தானே சுற்றிக்கொள்வது ஒன்று, சூரியனைச் சுற்றி வருவது மற்றொன்று. அது தன்னைத் தானே சுற்றிக் கொள்வதால் இரவும் பகலும் உண்டாகின்றன. அது எப்படியென்று ஒரு உதாரணத்தின் மூலமாய் விளக்குவோம்.

இருட்டு அடைந்த ஒரு அறையில் ஒரு விளக்கை ஏற்றி வையுங்கள். அதன் ஒரு பக்கத்தில், ஒரு பம்பரத்தைச் சுற்றி விடுங்கள். பம்பரம் சுழலும்போது, அதன்

ஒரு பக்கம் விளக்குக்கு எதிரில் வந்து வெளிச்சத்தை அடைகிறது. மற்ருெரு பக்கத்துக்கு வெளிச்சம் இல்லே. பம்பரம் சிறிது நேரம்கூட நில்லாமல் சுழன்றுகொண்டே இருப்பதனுல், அதன் சில பாகங்கள் வெளிச்சத்தை அடைகின்றன. சில பாகங்கள் இருட்டை அடைகின்றன.



விளக்குக்குப் பதிலாகச் சூரியனேயும் பம்பரத்துக்குப் பதிலாகப் பூமியையும் வைத்துக் கொள்வோம். பூமி தன்னேத்தானே சுற்றிவரும் போது, அதன் சில பாகங்கள் சூரியனுக்கு முன்வந்து வெளிச்சத்தை அடைகின்றன. மற்ற பாகங்கள் சூரிய வெளிச்சத்தை அடைய முடியாமல் இருளில் இருக்கின்றன. வெளிச்சமாயுள்ள பாகத்தைப் பகல் என்றும், இருட்டாயுள்ள பாகத்தை இரவு என்றும் சொல்லுகிருேம்.

இவ்வாறு பூமியின் ஒருபாகம் முதலில் சூரிய வெளிச்சத்தை அடைந்து, மறுபடியும் இருட்டை அடைவதற்கு 12 மணி நேரம் ஆகிறது. அந்தப்பாகம் இருட்டை விட்டு

வெளிச்சத்தைப் பெறுவதற்கு மறுபடியும் 12 மணி நேரம் ஆகிறது. ஆக ஒரு பகலும் ஒரு இரவும் சேர்ந்த நேரத்தை நாம் ஒரு நாள் என்று சொல்லுகிறோம். எனவே பூமி தன்னைத்தானே சுற்றிக்கொள்வதால் பகலும் இரவும் மாறி மாறி வருகின்றன. அங்ஙனம் பூமி தன்னைத்தானே சுற்றிக்கொள்ளாவிட்டால் என்ன நேரிடும்? சூரியனுக்கு எதிரிலுள்ள பூமியின் பாகத்துக்கு எப்போதும் பகலும். மற்ற பாகத்துக்கு எப்போதும் இருட்டும் உண்டு.

முன் காட்டிய பம்பர உதாரணத்தில், அப் பம்பரம் தன்னைத்தானே சுற்றிக் கொள்வது மன்றி தன்னிருப்பிடத்தை விட்டுச் சில வேளைகளில் நகருவதையும் நீங்கள் பார்த்திருக்கலாம். அதுபோல் இப்பூமி தன்னைத்தானே சுற்றிக்கொள்வதோடு தானிருக்கும் இடத்தை விட்டு நகர்ந்து, சூரியனுடைய ஆகர்ஷணசக்தியால் இழுக்கப்பட்டுச் சூரியனையும் சுற்றுகிறது.

பூமி இங்ஙனம் சூரியனைச் சுற்றிவர 365¼ நாட்கள் (அதாவது ஒரு வருஷம்)ஆகும். பூமியைப்போலவே பல கிரகங்கள் சூரியனைச் சுற்றி வருகின்றன. சூரியன் நமது பூமியைவிட 13 லக்ஷம் மடங்கு பெரியது. அது சுமார் பத்துக்கோடி மைலுக்கு அப்பால் இருப்பதால் மிகச் சிறிதாகக் காணப்படுகிறது. நீங்கள் பறக்கவிடும் பட்டம் மேலே போகப் போகச் சிறிதாய்க் காணப்படுகிறது. அது போல் தூரத்திலுள்ள வஸ்துக்கள் சிறியவையாகத்தான் காணப்படும். சூரியன் உருண்டை வடிவமான அக்கினி கோளம். அது தன்னைத்தானே சுற்றிக்கொள்ளுகிறது. ஆனால் வேறு கிரகங்களை அது சுற்றுகிறதில்லை.

சந்திரன் பூமியைச் சுற்றிக்கொண்டு வருகிற உபக்கிரகம். பூமி சூரியனைச் சுற்றி வரும்போது, பூமியோடு கூடவே சந்திரன் சூரியனைச் சுற்றுகிறது. சந்திரன் பூமியைச் சுற்றிவா 29 நாளும் பூமியுடன் சூரியனைச் சுற்றிவர ஒருவருஷமும் செல்லும். அது இயற்கையில் ஒளியுள்ளது அன்று. சூரியனிடத்திலிருந்து அது வெளிச்சத்தை அடைந்து பூமிக்குக் கொடுக்கிறது.

## கிராமமும் சுற்றுப்புறமும்.

நாம் ஒரு பெரிய கிராமத்தில் வசிப்பதாக வைத்துக்கொள்வோம். அந்தக் கிராமத்தில் அநேக வீடுகள் வரிசை வரிசையா யிருக்கும். அப்படி அநேக வீடுகள் வரிசையா யிருப்பதைத் தெரு என்கிறோம். உங்கள் கிராமத்தில் எத்தனை தெருக்கள் இருக்கின்றன? கோவிலும் பள்ளிக்கூடமும் உங்கள் ஊரிலேயே இருக்கக்காண்பீர்கள். நீங்கள் ஏதேனும் ஒரு சாமான் வாங்கவேண்டியதிருந்தால் எங்கே வாங்குகிறீர்கள்? உங்கள் கிராமத்தில் எத்தனை கடைகள் இருக்கின்றன? பெரிய கிராமங்களில் கடைவீதியும், தபாலாபீசும், சத்திரங்களும் இருக்கக் காண்பீர்கள்.

இனிக் கிராமத்துக்குவெளியில் உலாவப்போனால், அங்கே அநேக பொருள்களைப் பார்ப்பீர்கள். சில இடங்களில் மா, ஆல், அத்தி, அரசு, வேம்பு, புளி முதலான மரங்கள் வளர்ந்து காணப்படும். பல மரங்கள் சேர்ந்து ஒரு இடத்தில் வளர்ந்து இருந்தால் அதற்குத் தோப்பு என்று பெயர். இத்தோப்புகளையும் தனிமரங்களையும் தவிர நெல், வாழை, சோளம், காய்கறிகள் விளையும் நிலங்களையும் பார்ப்பீர்கள்.




பொதுவாக நிலங்கள் இரண்டு வகைப் பட்டவை. அவை நன்செய் நிலங்கள் புன்செய் நிலங்கள் எனப்படும். நெல் வயலைப் பாருங்கள். நெற்பயிரிடுவதற்குத் தண்ணீர் எப்போதும் வேண்டும். நெல்லை எப்படிப் பயிர்செய்கிறார்கள் தெரியுமா? நெற்பயிரிடும் நன்செய் நிலத்தில், முதலில் தண்ணீர் கட்டி உழுது சேறாக்கி உரமிடுகிறார்கள். நெல் பயிராகி அறுப்புமுடியும்வரை நிலத்தில் தண்ணீர் இருக்கவேண்டும். காய்ந்த நன்செய்நிலத்தை உழுதால் மண்கட்டி கட்டியாகப் பெயரும். அதில் தண்ணீரைப் பெருக்கினால் நிலம் தொளியாகும். நிலங்கள் நல்ல பலனைத்தர வேண்டுமானால் அவற்றுக்கு எரு முதலிய உரம் போடவேண்டும். ஆடுமாடுகளின் சாணியும், மக்கிப்போன இலை தளிர்களும் ஏற்ற எருவாகும். சில இடங்களில் பிண்ணாக்கு, எலும்புத்தூள் முதலியவற்றையும் எருவாக உபயோகிக்கிறார்கள். நெல் முக்கியமான நன்செய்ப் பயிர். அதைத்தவிர வாழை, வெற்றிலை, கரும்பு, சடம்பு முதலியனவும் பயிராக்கப்படு

கின்றன. தண்ணீர் பாயாத மேட்டு நிலங்களைப் புன்செய்கள் என்போம். சோளம், கம்பு, கேழ்வரகு, தினை, சாமை, குதிரைவாலி, உளுந்து, துவரை, மொச்சை என்பன இந்த நிலங்களில் பயிரிடப்படும். புன்செய்கள் முக்கியமாகக் கரிசல் செவ்வல் என இருவகைப்படும். கரிசலில் கறுப்பு நிறமுள்ள மண்ணும் சிறு கற்களும் சேர்ந்திருக்கும். கரிசலில் விசேஷமாகப் பருத்தியே செழித்துவளரும். செவ்வல் நிலம், செம்மண்ணும் கொஞ்சம் மணலும் கலந்துள்ளது. அந்நிலங்களில் முற்கூறிய தானியங்களும் பயறு வகைகளும் பயிராக்கப்படுகின்றன. தண்ணீர் தட்டான மேட்டு நன்செய் நிலங்களில் அடிக்கடி புன்செய்ப்பயிர்கள் பயிரிடப்படுகின்றன. சிறிதளவு வேண்டிய ஜலத்திற்காகக் கிணற்று நீரை இறைத்தும், மழையின் உதவியாலும் வெண்டி, மிளகாய், கொத்தவரை, வெங்காயம் முதலியன விளைவிக்கப்படுகின்றன. சில நிலங்கள் உப்பு சம்பந்தமான மேட்டு நிலமாயிருக்கும். அவற்றில் ஒன்றும் விளையாது. ஆயினும் அதிலுள்ள உவர்மண் துணிகளின் அழுக்கைப்போக்க உபயோகப்படுகின்றது. அம்மண் வண்ணானுக்குத்தேவை.

கடற்கரையிலும் வேறு மணற் பாங்கான இடங்களிலும், தென்னை, பனை, ஈச்சு, சவுக்கு, உடை முதலியன நன்கு உண்டாகின்றன.

கிராமங்களின் சுற்றுப் பக்கங்களில் சில இடங்கள் பயிரிடப்படாமல் தரிசு நிலமா யிருக்கும். அவற்றில் வளரும் புல்லை ஆடுமாடுகள் மேய்கின்றன. அந்நிலத்துக்கு மேய்ச்சல் கால்கள் என்று பெயர்.

உங்கள் ஊரில், செங்கற்காளவாய் இருக்கின்றனவா? அவை பெரும்பாலும் வயல்களிலாவது கண்மாயின் பக்கத்திலாவது வைக்கப்படுகின்றன. செங்கல் எதற்கு உபயோ

கப்படுகின்றது? முதலில் களிமண்ணைத் தோண்டித் தண்ணீர் வார்த்துப் பக்குவமாகக் குழைப்பார்கள். பிறகு கட்டளை (அச்சு) களால் அறுத்துப் பச்சைக் கல்லைக் காய வைத்து எடுப்பார்கள். அதன் பிறகு அவற்றை அடுக்கிக் கட்டைகளைச் சுற்றிவைத்துக் கொளுத்திச் செங்கல் செய்கிறார்கள். சுண்ணும்பும் நமக்குப் பல காரியங்களுக்கு உபயோகமாகின்றது. அது எப்படிக்கிடைக்கிறது தெரியுமா? சுண்ணும்புக் கல்லையும், கரியையும் கலந்து காளவாயிற் போட்டுக் கொளுத்தினுற் கரியெல்லாம் எரிந்து போகும்; கல்மட்டும் சுண்ணும்புக்கு உபயோகமாகிறது. கொஞ்சம் சுண்ணும்பு வேண்டியதாய் இருந்தால் கிளிஞ்சல்களைக் கல்லுக்குப் பிரதியாக உபயோகிக்கிறுர்கள்.

மண், சுண்ணும்புக்கல், கருங்கல் என்பன பூமியிலிருந்து வெட்டி எடுக்கப் படுகின்றன. பூமியிலிருந்து வெட்டி எடுக்கப்படும் பொருள்களுக்கு உலோகங்கள் என்று பெயர். தங்கம், வெள்ளி, இரும்பு, தாமிரம், ஈயம் என்பன பூமியிலிருந்து கிடைக்கும் உலோகங்களே.

---

## கைத்தொழில்கள்.

உயிர்ப்பிராணிகள் எல்லாவற்றுக்கும் உணவு அவசியம். ஆதலால், நமக்கு உணவு வேண்டும். ஒருநாள் அல்லது ஒருவேளை உணவு இல்லாவிட்டால் நாம் என்ன பாடு படுகிறோம்! அதனைத் தேடுவதற்கே எல்லோரும் சம்பாதிக்கிறுர்கள். அது எங்கே கிடைக்குமோ அங்கேயே மனிதர்கள் அதிகமாக வசிப்பார்கள். நமது நாட்டில் நெல், துவரை, உளுந்து, கேழ்வரகு, சோளம், தினை, முதலிய சில தானியங்களும், புளி, வாழை, மா, பலா

முதலிய பழங்களும் ஆகாரத்திற்கு உபயோகிக்கிறோம். இவை நீர்வளமும் நிலவளமுமுள்ள இடங்களில் உண்டாகின்றன. இவ்விடங்களில் தான் பெரிய நகரங்களும், கிராமங்களும் கட்டப்பட் டிருக்கின்றன. அங்குதான் நிலங்களை உடையவர்களும் அவர்களுக்குதவி செய்யுங் குடியானவர்களும் வாழ்வார்கள். உங்களுடைய ஊரில் குடியானவன், நிலம் உழுவதைப் பார்த்திருக்கிறீர்களா? இரண்டு மாடுகள் இழுத்துச் செல்லும் கலப்பையால் நிலத்திலுள்ள மண் கீழும் மேலும் கிளரப்படுகிறது. குடியானவன் அப்படிஉழுத பிறகு, பயிருக்குத்தக்கபடி பாத்திகள் கட்டி விதை விதைப்பான். பாத்திகள் கட்டாமல் பயிராக்கப்படும் பயிர்களும் உண்டு. அப்படி விதைத்த விதை பயிராகி வளர்ந்து முதிர்த்து பூத்துக் கதிரீனும். சில பயிர்கள் இரண்டு மூன்று மாதங்களில் பலன் கொடுக்கும். சில பயிர்கள் ஐந்தாறு மாதங்களில் பலன் தரும். அப்பயிர்களிலிருந்து உண்டாகும் தானியங்களைக் குடியானவர்கள் வீடு கொண்டுவந்து சேர்ப்பார்கள். குடியானவர்கள் தாமே அவ்வளவு பொருள்களையும் தங்கள் வீடுகளில் வைத்துக்கொள்ள முடியுமா? ஆசாரி, சேணியன், இடையன், வண்ணன், அம்பட்டன் முதலிய தொழிலாளர் உதவி அவர்களுக்கு வேண்டுமன்றோ? ஆதலால் தங்களுக்குக் கிடைத்த விளைபொருள்களை அவர்களுக்குங் கொடுப்பார்கள். அவற்றைப்பெற்று அத்தொழிலாளிகள்ஜீவிப்பார்கள்.

ஆசாரிகளில் கருமான், தச்சன், கன்னன், தட்டான் என்ற நான்கு பிரிவினர்கள் இருக்கிறார்கள். இவர்களில் கருமான், இரும்பு என்ற உலோகத்தாற் பல சாமான்களைச் செய்கிறான். அவனைக் கொல்லன் என்றும் சொல்லுவார்கள். இரும்பு மிகவும் உபயோகமான உலோகம்.


கருமான்.

கொல்லன் இரும்பால் சாமான்கள் செய்யா விட்டால் உலகத்தில் எந்தக் கைத் தொழிலும் நடக்காது. ஆதலால் நான்கு வகை ஆசாரிகளும் ஒரு இடத்திற் கூடினால் கொல்லனுக்கே முதல் மரியாதை நடக்கும். விவசாயத்துக்கு வேண்டிய கலப்பைகள் மண்வெட்டி, அரிவாள் கடப்பாரை என்பவற்றைச் செய்பவன் யார்? வீடுகளுக்கு அவசியமான ஆணி, கீல், பூட்டு, காண்டி, இரும்புச்சட்டி முதலிய பல சாமான்களைச் செய்பவன் யார்? தச்சனும், கன்னானும் தட்டானும் வைத்திருக்கும் ஆயுதங்களைச் செய்தவன் யார்? அவன் தான் கொல்லன். கொல்லன் வேலைசெய்யுமிடத்தையும் நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? அவன் வைத்திருக்கும் ஆயுதங்களையும் அவற்றை உபயோகிக்கும் விதத்தையும் பாருங்கள்.

தச்சன் மரவேலை செய்பவன். உங்கள் பள்ளிக்கூட வகுப்பிலுள்ள நாற்காலிகளையும் மேஜை, பெஞ்சு, கதவு, ஜன்னல், கலப்பை, முதலிய சாமான்களையும் செய்பவன் யார்? அவன்தான் தச்சன். தச்சன் தன் பட்டரையில் உபயோகிக்கும் ஆயுதங்கள் எவை என்றும் அவற்றால் அவன் என்ன செய்கிறான் என்றும் சொல்லுவீர்களா?


தச்சன்.

கன்னான் பித்தளை, தாமிரம், வெண்கலம் ஈயம், என்னும் உலோகங்களால் பாத்திரங்கள் செய்பவன்.



கன்னான்.



தட்டான்.

தட்டான் தங்கம் வெள்ளி முதலியவற்றால் நகைகள் செய்பவன். அவன் நுட்பமான பல ஆயுதங்கள் வைத்-

திருப்பான். உங்களிற் சிலர் அணிந்திருக்கும் கடுக்கனும், தட்டும், காப்பும், மோதிரமும் செய்தவன் தட்டானே. இன்னும் பெண்கள் அணியும் அநேக ஆபரணங்களையும் அவனே செய்கிறான்.

நெசவுத்தொழிலாளர்:—நாம் எல்லோரும் வேஷ்டிகள் உடுத்துகிறோம். நம்மில் சிலர் சொக்காய் போடுகிறோம். இவற்றை நெய்கிறவர்கள் சேணியர். சாலியர், செங்குந்தர், ஈழுவர், வள்ளுவர் என்கிற பல ஜாதியார்கள். அவர்கள் துணிகளை எப்படி நெய்கிறார்கள்? முதலில் பருத்தியை நூலாக நூற்றுப் பின் நெசவு இயந்திரத்தில் துணிகளாக நெய்கிறார்கள். பருத்தியின் நிறம் என்ன? வெள்ளை நிறம். ஆனால் கறுப்பு, சிவப்பு, மஞ்சள், பச்சை முதலிய துணிகளையும் சிலர் உடுத்துவதை நீங்கள் பார்த்திருக்கிறீர்கள் அல்லவா? அந்தத் துணிகள் பல நிறங்களில் எப்படிச் செய்யப்படுகின்றனதெரியுமா? முதலில் நூலுக்குக் கறுப்பு, சிவப்பு, மஞ்சள், பச்சை நிறமான பலவிதச் சாயங்களை ஏற்ற வேண்டும். பின்பு தேவையான நிறமுள்ள நூல்களால் துணிகளை நெய்ய வேண்டும். இப்படி நெய்யும் தொழிலுக்கு நெசவுத் தொழில் என்று பெயர். வஸ்திரங்கள் நமக்கு முக்கியமல்லவா? ஆதலால் இப்போது சில பள்ளிக் கூடங்களில் நெசவுத் தொழிலும் மாணவர்களுக்குக் கற்பிக்கப்படுகிறது.

## வாணியன்.

நாம் பலகாரங்கள் சுடுவதற்கும், தேய்த்துக் குளிப்பதற்கும் எண்ணெயை உபயோகிக்கிறோம். அது எப்படிக் கிடைக்கிறது தெரியுமா? செக்கில் எள்ளைப் போட்டு ஆட்டி எண்ணெய் எடுக்கப்படுகிறது. அப்படி எண்ணெய் எடுக்கிறவனை வாணியன் என்றும் செக்கான் என்றும்

சொல்லுகிறோம். நீங்கள் செக்கைப் பார்த்திருக்கிறீர்களா? உங்கள் உபாத்தியாயருடன்சென்று செக்கைப் பாருங்கள். எள்ளைத் தவிர நிலக்கடலை, ஆமணக்கு, தேங்காய் முதலியவற்றிலிருந்தும் எண்ணெய் எடுக்கப்படுகிறது.



குயவன்.

மண்ணால் செய்யப்பட்ட பானை, குடம் முதலிய பாண்டங்களை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அவற்றைச்செய்கிறவனே குயவன். அவன் எப்படி மண் பாண்டங்களைச் செய்கிறான்? களிமண்ணைக் கொண்டுவந்து அதிலுள்ளகல், புல் முதலியவைகளை எடுத்துவிட்டுப் பிறகு களிமண்ணைக் கால்களால்மிதித்துக் கைகளாற் பிசைந்து பக்குவப்படுத்துகிறான். பிறகு சக்கரத்தில் வைத்து வேண்டிய பாண்டத்தைச் செய்து சூளையில் வைத்துச் சுட்டு எடுக்கிறான்.

குயவன் பாண்டங்கள் செய்யும் இடத்திற்கு நீங்கள் போய்ப் பாருங்கள்.

### இடையர்.

இடையர் ஆடுமாடுகளை மேய்த்துப் பரிபாலிப்பவர் கள். தாங்களே மாடுகள் வைத்தும், ஆடுகளை மேய்த் தும் ஜீவிப்பார்கள். அவர்கள் பாலைக்கறந்து விற்பனை செய் கிறார்கள். மீதிப் பாலைத் தயிர், மோராகச் செய்கிறார்கள். தயிரைக் கடைந்து வெண்ணெயும், வெண்ணெயைக் காய்ச்சி நெய்யுமாகச் செய்து விற்கிறார்கள்.

### வண்ணான்.

துணிகள் அழுக்காய்விட்டால் நீங்கள் என்ன செய்கி றீர்கள்? உங்களால் வெளுப்பாக்க முடியாத துணிகளை வெளுத்துக் கொடுக்கிறவன் யார்? அவனே வண்ணான். வண்ணான் உதவியும் நமக்கு அவசியமல்லவா?

முன்னே கூறிய இவர்களைத் தவிர இன்னும் அநேக தொழிலாளிகள் இருக்கிறார்கள். செம்படவர் மீன் பிடித்து விற்பவர். நீங்கள் உபயோகிக்கும் செருப்பு, பூட்ஸ் செய் பவர் சக்கிலியர்கள். அல்லது செம்மான்கள். இவர்கள் இன்னும் அநேக சாமான்களைச் செய்வார்கள். குதிரைச் சேணம், வடக்கயிறு முதலியவற்றை இவர்கள் தோலால் செய்கிறார்கள். முற்கூறிய எல்லாத் தொழிலாளிகளும் தாங்கள் செய்த சாமான்களை எங்கே விற்கிறார்கள்?

## வர்த்தகம் (வியாபாரம்)

நீங்கள் உங்கள் புஸ்தகம், கற்பலகை, பென்சில், காகிதம் எங்கே வாங்குகிறீர்கள்? அந்தக் கடைகளைத் தவிர என்ன கடைகளைப் பார்த்திருக்கிறீர்கள்? உங்கள் ஊரில் விளையும்

பொருள்களையும் வேறு பொருள்களையும் கடைகளில் வாங்கலாமல்லவா? உங்கள் ஊரில் சந்தை கூடுகிறதா? உங்கள் ஊரில் விளையும் பொருள்களில் உபயோகப் பட்டவைபோக மீதமான பொருள்களை வெளியிடங்களில் விற்பார்கள். வெளியிடங்களில் மீந்தபொருள்களைக் கொடுத்து நமக்கு உபயோகமான பொருள்களை வாங்கி உங்கள் ஊர்களில் விற்கிறார்கள். இப்படி ஒரு பொருளைக் கொடுத்து மற்றொரு பொருளை வாங்கும் தொழிலுக்கு வியாபாரம் என்று பெயர். நமது ஊரிலிருந்து வெளியில் அனுப்பப்படும் பொருள்களுக்கு ஏற்றுமதி என்றும், வெளியிடங்களிலிருந்து வந்து ஊரில் இறங்கும் பொருள்களுக்கு இறக்குமதி என்றும் பெயர். வியாபாரம் நடக்கும் இடங்கள் கடைகளும் சந்தைகளுமே ஆகும்.

## போக்கு வரவு சாதனங்கள்.

உங்கள் ஊருக்கு வெளியிடங்களிலிருந்து மாட்டு வண்டிகளின் மூலமாய்ப் பல பொருள்கள் கொண்டுவரப் படுகின்றன. பல வண்டிகள் தங்கியிருக்கும் இடத்துக்கு வண்டிப்பேட்டை என்று பெயர். உங்கள் ஊர் ஒரு பெரிய நதியின் கரையிலிருந்தால், அடுத்த கரையிலிருந்து படகுகளிலும் தோணிகளிலும் சாமான்கள் கொண்டுவரப்படும். புகைவண்டிகள் ஓடுமிடங்களில், அவற்றிலேயே வேண்டிய இடங்களுக்குச் சாமான்கள் அனுப்பப்படுகின்றன.

வண்டிகள், படகுகள், புகைவண்டிகள் என்பவற்றில் ஓர் ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குச் சாமான்கள் கொண்டு போகிறார்கள் என்று அறிந்தோம். வண்டிகள் செல்வதற்கு ரஸ்தாக்கள் போடப்பட்டிருக்கின்றன. ரஸ்தாக்களின் இரு பக்கங்களிலும் மரங்கள் வைக்கப்பட்டுள்ளன.

ரஸ்தாக்கள்மேடுபள்ளமின்றி இருப்பதற்குச்சரளைக் கற்கள் போட்டு ஒழுங்கு செய்யப்பட்டிருக்கின்றன. ரஸ்தாக்கள் செல்லும்பாதையில் நதிகள் குறுக்கிடுமல்லவா? அவ்விடங் களில் பாலங்கள் கட்டப்பட்டிருக்கின்றன; அப்பாலங்க ளின் மேல் வண்டிகள் செல்லும்.



புகைவண்டிகள் உங்கள் ஊருக்குச் சமீபத்தில் செல் லுகிறதா? நீங்கள் அவ்வண்டியை அவசியம் பார்க்க வேண்டும். அதன் படம் இதோ இருக்கிறது பாருங்கள். பல வண்டிகளால் இணைக்கப்பெற்ற தொடரை என்ஜின் என்ற சூத்திரவண்டி நீராவியின் உதவியால் இழுத்துக் கொண்டு மேடு பள்ளமில்லாதபாதைமேற் போடப்பட்ட இரண்டு சமசதூரமான தண்டவாளங்களின்மேல் ஓடுகிறது. துரைத்தனத்தாரால் நமக்குண்டான உபகாரங்களில் இது

வும் ஒன்று. இதில் அதிசீக்கிரத்தில் சொற்பச் செலவி லும் நினைத்த இடம் போகலாம். அவ்வண்டிகளின் மூலம் பலபல சரக்குகள் எற்றுமதியும் இறக்குமதியும் ஆகின்றன. மெயில் வண்டிகளில் தபாற் கடிதங்களும் கொண்டுபோகப் படுகின்றன. இருப்புப் பாதையின் ஒரு பக்கத்தில் தூண்க ளும், அவற்றின்மேற் கம்பிகளும் வழி நெடுகப் போடப் பட்டிருப்பதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அவற்றின் மூலமாகவே தந்திசமாச்சாரங்கள் ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குத் தெரிவிக்கப்படுகின்றன.

## ஜனங்கள், ஜாதி, மதம், பாஷை முதலியன.

கடவுளால் உலகத்தில் உண்டாக்கப்பட்ட ஜீவராசி கள் கணக்கில் அடங்காதவை. இந்த எல்லா ஜீவராசிகளி லும் மனிதரே உயர்ந்தவர்கள். அவர்களுக்கு இது நல் லது, இது கெட்டது என்று அறியும் பகுத்தறிவு உண்டு. மிருகங்கள் தங்களுக்குவேண்டியஉணவு இயற்கையிலேயே சுலபமாய் அகப்படும் இடங்களை நாடிச் சென்று வாசம் செய்யும். மனிதர்களோ இயற்கையாகக் கிடைக்கும் பொருள்களையும் காலநேரங்களையும் உத்தேசித்து வேண் டியபடி வேலை செய்து உணவைப் பெற்று ஜீவிக்கிறார்கள். நமது தேசம் அதிக மலைப்பிரதேசமாயும், வனாந்தரமாயும் இல்லாமல், நிலவளம் நீர்வளம் பொருந்திய பூமியாயிருக்கி றது. இந்தத் தேசத்தில் உழுது பயிரிட்டு ஜீவிப்பவர்களே பலர். ஆதலால் விவசாயத்துக்கு எற்றநீர்வளமுள்ள இடங்க ளில் வீடுகள்கட்டிக்கொண்டு ஜனங்கள்வசிக்கிறார்கள். நதிக் கரைகளிலேயே பலபட்டணங்களும் கிராமங்களும் எற்படு கின்றன. கிராம வாசிகளே நமது தேசத்தில் அதிகமான பேர்கள். ஆங்காங்கு வியாபாரமும் கைத்தொழிலும், கல் வியும் மிகுந்த இடங்களில் பட்டணங்கள் எற்படுகின்றன,

ஒவ்வொரு நாகரிக ராஜாங்கமும் அந்த இராஜாங்கத்திற்குட்பட்ட ஜனங்களின் தொகை, ஜீவனம் முதலிய விஷயங்களைச் சில சமயங்களில் கணக்கிட்டுத் தேசத்தின் விருத்தாந்தங்களை எல்லாருக்கும் தெரியும்படி வெளிப்படுத்துவார்கள். அப்படியே நமது தேசத்திலும் 10 வருஷங்களுக்கு ஒரு முறை இந்தக் கணக்குத் துரைத்தனத்தாரால் எடுக்கப்படுகிறது. இதற்குச் சென்ஸஸ் (Census) அல்லது ஜனசங்கியை என்று பெயர்.

ஜனங்கள் எல்லாரும் கடவுளை அறிய முடிவதில்லை. உங்கள் வகுப்புப் பிள்ளைகள் எல்லாரும் ஒரே கடவுளை வழிபடுகிறீர்களா? இல்லை. உங்கள் வகுப்பில் இந்துக்களும், முகம்மதியர்களும், கிறிஸ்தவர்களும் படிப்பீர்கள். புராதனமான பழைய வேதங்களை ஒப்புக்கொண்டு அதன்படி கடவுளை வழிபடுகிறவர்கள் இந்துக்கள். இந்துக்களிற் சிலர் விஷ்ணுவையும், சிலர் சிவனையும் வழிபடுகிறார்கள். விஷ்ணுவை வழிபடுவோர் வைஷ்ணவர்கள். சிவனைத் தொழுகிறவர்கள் சைவர்கள். முகம்மது என்ற பெரியவர் அரேபியா தேசத்தில் ஆதியில் போதித்துவந்த மதம் முகம்மதிய மதம். அதை அனுசரிப்பவர் முகம்மதியர். அவர்களும் நமது நாட்டில் இருக்கிறார்கள். இயேசு கிறிஸ்து என்ற பெரியார் ஏற்படுத்திய மதம் கிறிஸ்தவ மதம். அதை அனுசரிப்பவர்கள் கிறிஸ்தவர்கள். இந்த 3 மதங்களையும் அனுசரிப்பவர்களே, நமது ஜில்லாவில் அதிகமாயிருக்கிறார்கள்.

ஜாதி:—இந்துக்களில் பல ஜாதியார்கள் இருக்கிறார்கள். அவர்களில், பிராமணர் வேளாளர், முதலியார்கள், பிள்ளைகள், நாயக்கர்கள், கள்ளர், மறவர்; அகம்படியார்,

படையாச்சி, சில ஜாதியார்கள். வேறு சில ஜாதியார்களை யும் அவர்களுடைய தொழில்களையும் பற்றி முன்னமே படித்திருக்கிறீர்கள். ஒரு மதத்தைச் சேர்ந்த எல்லா ஜாதி யாரும் ஒரே பாஷையைப் பேசுவதில்லை. இந்துக்களில் சிலர் தமிழையும், சிலர் தெலுங்கையும், சிலர் கன்னடத் தையும் நமது ராஜதானியில் பேசுகிறார்கள். முகம்மதியர் இந்துஸ்தானி பாஷையும், தமிழும் பேசுகிறார்கள். இரா ஜாங்க பாஷையாகிய இங்கிலீஷ் பாஷையைச் சிலரே பேசு கிறார்கள். அதனைப் பேசுகிறவர்கள், நூற்றுக்குப் பத்தும் பேர்தான்.

## துரைத்தனம்.

உங்கள் வீட்டுக்கு வேண்டிய சாமான்களைத் தேடிக் கொடுப்பவர் யார்? உங்கள் வீட்டில் பிள்ளைகள் சண்டை யிட்டால் தீர்த்துவைப்பவர் யார்? உங்கள் தகப்பனார். அவரே உங்கள் வீட்டுத் தலைவர். அவ்வாறே உங்கள் ஊருக்குத் தலைவர் ஒருவர் இருக்கிறார். அவர்தான் கிராம முனிசிபு. அவருக்கு, உதவியாக ஏற்பட்ட வேலையைச் செய்யத் தலையாரி, வெட்டியான் முதலிய கிராம சிப்பந்தி கள் இருக்கிறார்கள். பல கிராமங்கள் சேர்ந்து ஒரு தாலூ காவும், பல தாலூகாக்கள் ஒரு ஜில்லாவும், பல ஜில்லாக் கள் கூடி ஒரு ராஜதானியும் ஆகின்றன. இதை முன்னமே படித்திருக்கிறீர்கள். இவைகள் எல்லாவற்றிற்கும் படிப் படியாய்ப் பெரிய உத்தியோகஸ்தர்கள் ஏற்பட்டிருக்கிறார் கள். நமது இந்தியா தேசத்தைப் பரிபாலித்து வருபவர் மாட்சிமை தங்கிய ஐந்தாம் ஜார்ஜ் சக்கரவர்த்தி அவர்கள். அவருடைய திருவுருவப்படம் இந்தப் புஸ்தகத்தின் முன் பக்கத்தில் இருக்கிறது பாருங்கள்.

## நிலப் பிரிவுகள்.

நீங்கள் மழை பெய்து ஓய்ந்த பிறகு, வெளியே சென்று பார்த்தால் அநேக இடங்களில் சிறிதளவு நீர் ஓடுவதையும், பல நீர் ஓடைகள் ஒரு இடத்தில் சேருவதை யும் பார்க்கலாம். சேர்ந்த நீர் ஒன்ருகத் திரண்டு வேறு இடத்திற்கு ஓடலாம். இடையிடையே திட்டுகளைப் போலச் சில மண்மேடுகள் காணப்படும்.

அதுபோல நீங்கள் உங்கள் ஊரிலுள்ள கண்மாய்க் கரைமீதில் நின்று நான்கு பக்கங்களையும் சுற்றிப் பார்த்தால் நிலப்பாகமும் நீர்ப்பாகமும் இடையிடையே பிரிந்து காணப் படும். பூபாகத்தில், சாகுபடிகளையும் மாடு ஆடுகள் மேய் வதையும் நீங்கள் பார்க்கலாம். வயல்களில் நீரைக் கட்டி அது தேங்கி இருப்பதையும் நீங்கள் பார்க்கலாம்.

உயரமான கோபுரம் அல்லது மலையின்மேல் ஏறி நீங்கள் சுற்றிலும் பார்த்தீர்களானுல் பல கிராமங்கள் கண்மாய்கள் சாகுபடிநிலங்கள் வீடுகள் முதலியவற்றைக் காண்பிர்கள்.

இவ்வாறு ஒரு ஜில்லா அல்லது தேசம் முதலிய பெரிய பூபாகத்தின் அமைப்பைக் காட்டுவதற்குத் தயா ரிக்கப்படுகிற இந்தப் படத்திலிருந்து தேசத்திலுள்ள பெரிய நீர்ப் பிரிவுகளையும், நிலப் பிரிவுகளையும் நாம் தெரிந்துகொள்ளலாம்.

இப்படி அநேக தேசங்கள் சேர்ந்து ஒரு கண்டம் ஆகிறது. இந்தக் கண்டத்தில், நாம் முன் உயரமான இடத்திலிருந்து பார்த்தபோது சிறிதாகக் காணப்பட்ட நீர் நிலப் பிரிவுகளைப்போல் எவ்வளவோ மடங்கு விஸ் திரணமுள்ள பூபாகங்களைப் பார்க்கலாம்.

கீழே காட்டிய படத்தில் இந்த நிலப்பாகங்கள் நீர்ப் பாகங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன.

தீவு—எல்லாப் பாகங்களிலும் தண்ணீரால் சூழப்பட்டிருக்கும் நிலப்பாகத்திற்குத் தீவு என்று பெயர் (உ-ம்) ராமேஸ்வரம்

தீபகற்பம்—அநேகமாக மூன்று பக்கமும் தண்ணீரால் சூழப்பட்ட நிலப் பாகத்துக்குத் தீபகற்பம் என்று பெயர். (உ-ம்) நாம் வசிக்கும் இந்தியா.

பூசந்தி—இரண்டு பெரிய நிலப்பாகங்களைச் சேர்த்து இரண்டு பெரும் ஜலபாகங்களைப் பிரிக்கும் குறுகிய நிலப் பாகத்துக்குப் பூசந்தி என்று பெயர். (உ-ம்) ஐரோப்பாவி லுள்ள கோரிந்து பூசந்தி.

முனை—சமுத்திரக்கரையின் ஒரு பாகமானது சில இடத்தில் சமுத்திரத்திற்குள் ஒடுங்கிக் கூர்மையாய் நீண்டி ருக்கும். அப்படிப்பட்ட பூபாகத்துக்கு முனை என்று பெயர். (உ-ம்) நமது தேசத்தின் தென்கோடியிலுள்ள கன்னியாகுமரி முனை.

மலை—நீங்கள் மலையைப் பார்த்திருக்கிறீர்கள். அது பூமி மட்டத்திற்கு மேல், மிகவும் உயர்வாய்க் காணப்படு கிறது. இப்படி உயர்ந்து இருக்கும் பாகத்திற்கு மலை என்று பெயர். (உ-ம்) பழநி மலை.

மலைத்தொடர்ச்சி—பல மலைகள் ஒன்றோடொன்று அடுத்து அடுத்துச் சேர்ந்திருப்பதற்கு மலைத்தொடர்ச்சி என்று பெயர். (உ-ம்) மேற்குத் தொடர்ச்சிமலை.

குன்று—மலையிலும் சற்றச் சிறியதாய் மரம், செடிகள் அதிகமாய் முளைத்திராத சிறிய மலைக்குக் குன்று என்று பெயர். (உ-ம்) யானைக் குன்று.

பள்ளத்தாக்கு—இரண்டு மலைகளுக்கும் ஊடேயுள்ள தாழ்ந்த பூமிக்குப் பள்ளத்தாக்கு என்று பெயர். (உ-ம்) கம்பம் பள்ளத்தாக்கு.

காடு—அநேக செடிகொடிகள் அடர்ந்திருக்கும் விசா லமான தரைப்பாகத்திற்குக் காடு என்று பெயர். (உ-ம்) அழகர்கோவிற் காடேள்.

## நீர்ப்பிரிவுகள்.

மகாசமுத்திரம்—உங்களுடைய ஊரில் பெரும் பள்ளங்களில் நீர் தேங்கி இருப்பதைப் பார்த்திருக்கிறீர்கள். அவற்றிலும் பெரிதான கண்மாய், எரி முதலியவற்றையும் நீங்கள் பார்த்திருக்கிறீர்கள். அவற்றிலும் எவ்வளவோ மடங்கு பெரிதாய்க் கண்ணுக்கு எட்டாத அளவு பரவியும் உப்பு நீருடையதாயும் உள்ள ஜல பாகத்துக்கு மகா சமுத்திரம் என்று பெயர். அநேகமாய்ப் பெரிய நதிகள் எல்லாம் சமுத்திரங்களிலேயே போய் விழுகின்றன. (உ-ம்) இந்துமகாசமுத்திரம்.

வளைகுடா—சமுத்திரக்கரை, சில இடங்களில் அதிக அலையால் உடைந்தும், சில இடங்களில் உடையாமலும் இருக்கும். உடைந்த இடங்களில் பூமிக்குள் குறுகிச் செல்லும் சமுத்திரத்தின் பாகத்துக்கு வளைகுடா என்று பெயர். (உ-ம்) பார்ஸீக வளைகுடா.

விரிகுடா—விரிந்த வாயுடன் பூமிக்குள் செல்லும் ஜல பாகத்துக்கு விரிகுடா என்று பெயர். (உ-ம்) நமது தேசத்திற்குக் கிழக்கிலுள்ள வங்காள விரிகுடா.

கடல்—இது சமுத்திரத்தைப் பார்க்கிலும் சற்றுச் சிறிதான உப்பு நீர்ப்பாகம். (உ-ம்) நம்முடைய தேசத்திற்கு மேற்கிலுள்ள அராபிக்கடல்.

ஜலசந்தி—தண்ணீர் நிரம்பிய இரண்டு வயல்களுக்கு ஊடேயுள்ள வரப்பை வெட்டி விட்டால் என்ன ஆகும்? அவ் இரண்டு வயல்களிலுமுள்ள தண்ணீரும் குறுகிய நீர்ப் பாகத்தால் சேர்க்கப்படும். அதுபோல், இரண்டு பெரிய ஜலபாகங்களைச் சேர்த்து, இரண்டு பூபாகங்களைப் பிரிக்கும் ஜல பாகத்திற்கு ஜலசந்தி என்று பெயர். (உ-ம்) இந்தியாவிற்கும் இலங்கைக்கும் மத்தியி லிருக்கும் பாக்ஸ் ஜலசந்தி.

ஏரி—நான்கு பாகங்களிலும் தரை சூழ்ந்த ஜல பாகத்திற்கு ஏரி என்று பெயர். (உ-ம்) மாடக்குளம் ஏரி.

நதி—மழை பெய்தவுடன் தண்ணீர் ஒன்றாய்ச்சேர்ந்து பள்ளமான இடத்தை நோக்கிச் செல்வதைப் பார்த்திருப்பீர்கள். அதுபோல் உயர்ந்த மலைகளில் உற்பத்தியாகிப் பள்ளத்தை நோக்கிச் செல்லும் நீர்ப்பாகத்திற்கு நதி என்று பெயர். (உ-ம்) நமது ஜில்லாவில் ஓடும் வைகை நதி.

உபநதி—ஒரு பெரிய நதியில் வந்து கலக்கும் சிறு நதிக்கு உபநதி என்று பெயர். (உ-ம்) அமராவதியாறு.

கிளைநதி—ஒரு நதியிலிருந்து பிரிந்து செல்லும் ஆற்றுக்குக் கிளைநதி என்று பெயர். (உ-ம்) காவேரியின் பிரிவாகிய கிருதமாலை.

# ஜில்லா.

நம்முடைய இந்தியா தேசத்தைப் பல ராஜதானிகளாகப் பிரித்திருக்கிறார்கள். அவைகளில் சென்னை ராஜதானியும் ஒன்று. சென்னை ராஜதானி 26 பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பிரிவிற்கும் ஜில்லா என்று பெயர். சென்னைராஜதானியின் 26 ஜில்லாக்கள்:—

| | | | |
|---|---|---|---|
| 1 | கஞ்சம் | 14 | அஞ்சங்கோ |
| 2 | விசாகபட்டணம் | 15 | தென்கன்னடம் |
| 3 | கோதாவரி | 16 | கடப்பை |
| 4 | கிருஷ்ணா | 17 | கர்நூல் |
| 5 | குண்டூர் | 18 | பல்லாரி |
| 6 | நெல்லூர் | 19 | அனந்தபுரம் |
| 7 | மதராஸ் | 20 | சித்தூர் |
| 8 | செங்கற்பட்டு | 21 | வடஆற்காடு |
| 9 | தென் ஆற்காடு | 22 | சேலம் |
| 10 | தஞ்சாவூர் | 23 | கோயம்புத்தூர் |
| 11 | இராமநாதபுரம் | 24 | திருச்சிராப்பள்ளி |
| 12 | திருநெல்வேலி | 25 | மதுரை |
| 13 | மலையாளம் | 26 | நீலகிரி |

---



மதுரை ஜில்லா
ஸ்கேல் 16 மைல் = 1 அங்.
திருச்சிராப்பள்ளி ஜில்லா
கோயம்புத்தூர் ஜில்லா
புதுக்கோட்டை
திருவாங்கூர் ராஜ்யம்
பழனி தாலூகா
கீரனூர்
சத்திரப்பட்டி
பழனி
திண்டுக்கல் தாலூகா
பலகனூத்து
அய்யலூர்
வடமதுரை
திண்டுக்கல்
அம்பாத்துறை
பூம்பாறை
கொடைக்கானல் தாலூகா
நிலக்கோட்டை
நிலக்கோட்டை தாலூகா
வத்தலக்குண்டு
சோழவந்தான்
மேலூர் தாலூகா
அழகர்கோவில்
மேலூர்
பெரியகுளம்
போடிநாயக்கனூர்
தேனி
உசிலம்பட்டி
ஆண்டிபட்டி
சமயநல்லூர்
மதுரை தாலூகா
பெரியகுளம் தாலூகா
உத்தமபாளையம்
திருப்பரங்குன்றம்
கப்பலூர்
திருமங்கலம் தாலூகா
திருமங்கலம்
கள்ளிக்குடி
C.V.J

# மதுரை ஜில்லா.

---

நாம் வசிக்கும் இந்த ஜில்லாவிற்கு மதுரை ஜில்லா என்று பெயர். நமது சொந்த நாட்டின் பெயரைக் கேட்பது நமது காதிற்கு இன்பமாய் இருக்குமென்று எண்ணுகிறேன். பூர்வகாலம் தொட்டுப் பெயர் பெற்ற இந்நாட்டைப்பற்றி அறிவது அவசியமல்லவா?

இந்த ஜில்லா 1910-ஆம் வருஷம் வரைக்கும் இராமநாதபுரம், சிவகங்கை முதலிய பாகங்களை உடையதாயிருந்தது. ஆனால் இப்போது இதினின்றும் இவ்விரு பாகங்களும் புதிதாய் ஏற்படுத்தப்பட்ட இராமநாதபுரம் ஜில்லாவோடு சேர்க்கப்பட்டன.

## எல்லைகள்.

உங்கள் பள்ளிக்கூடத்தைச் சுற்றி நான்கு பக்கங்களிலும் எவை இருக்கின்றன என்று நீங்கள் கவனித்தால், ரஸ்தாக்களும், வீதிகளும், வீடுகள் முதலியனவும் இருக்கக் காண்பீர்கள். அதேமாதிரியாக உங்கள் ஊரைச் சுற்றி, வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு ஆகிய நான்கு திக்குகளிலும் சில கிராமங்கள், பட்டணங்கள், வயல், நதி, குன்று முதலியன இருக்கலாம். அப்படிச் சுற்றி இருப்பனவே அவ்வூருக்கு எல்லைகளாம்.

உங்கள் பள்ளிக்கூடம் அல்லது உங்கள் ஊரின் எல்லைகளைப் பார்த்துத் தெரிந்து கொள்வது மிகவும் சுலபம். ஏனெனில், நீங்களே நேரில் பள்ளிக்கூடம், அல்லது ஊரின் எல்லைகளைச் சுற்றிப் பார்த்துக் கண்டுபிடித்துவிடலாம். உங்கள் ஜில்லா முழுவதையும் நீங்கள் சுற்றிப்

பார்க்க முடியாததால் அதன் எல்லைகளை நீங்கள் எவ்வாறு அறிவீர்கள்? அதற்கு ஒரு யுக்தி இருக்கிறது. அதாவது, நமது ஜில்லாப் படத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்.

இனி நமது ஜில்லாவின் எல்லைகளைப் பார்ப்போம். வடக்கே கோயம்புத்தூர், திருச்சிராப்பள்ளி ஜில்லாக்களும், கிழக்கே திருச்சிராப்பள்ளி ஜில்லாவும், புதுக்கோட்டை ராஜ்யமும், இராமநாதபுரம் ஜில்லாவும், தெற்கே இராமநாதபுரம் ஜில்லாவும், மேற்கே மேற்குத் தொடர்ச்சிமலைகளும் இதற்கு எல்லைகளாய் இருக்கின்றன.

## இயற்கை அமைப்பு.

இயற்கை அமைப்பின்படி இந்த ஜில்லாவை ஐந்து பாகங்களாகப் பிரிக்கலாம். அவைகளாவன:—

1. மலைப்பிரதேசம்:-பழநியைச் சுற்றிய பாகங்கள்.

2. கரிசல் தரை:-திருமங்கலம் தாலூகாவின் பெரும் பாகம்.

3. நீர்வளமுள்ள பாகம்:-வைகை நதியும், பெரியாறும், அதன் கால்களும் பாயுமிடங்கள்.

4. நீரில்லாத செவ்வல் நிலம்:-திண்டுக்கல், மேலூர் தாலூகாக்களின் பெரும்பாகம்.

5. பள்ளத்தாக்கு:—பெரியகுளம் தாலூகாவின் பெரும்பாகங்கள்.

இனி இந்நிலங்களின் இயல்புக்குத் தக்கபடி விளைபொருள்கள் இருக்கும்.

## இராஜாங்கப் பிரிவினை.

இந்த ஜில்லாவை நமது துரைத்தனத்தார் எட்டுப் பாகங்களாகப் பிரித்திருக்கிறார்கள். அவை ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு தாலூகா என்று பெயர். இவைகளில் மத்தியிலிருப்பதுதான் நிலக்கோட்டைத்தாலூகா. அதைச் சுற்றிலும் மதுரை, திருமங்கலம், பெரியகுளம், கோடைக் கானல், பழநி, திண்டுக்கல், மேலூர் தாலூகாக்கள் இருக்கின்றன.

### மலைகள்.

1. மேற்குமலைத் தொடர்—இம்மலைத் தொடரானது இந்த ஜில்லாவின் மேற்கு எல்லையாய் இருக்கிறது என்று முன்னரே அறிந்திருக்கிறீர்கள். இத்தொடர் திருநெல் வேலி ஜில்லாவை அடுத்த கன்னியாகுமரியிலிருந்து வடக்கே வெகுதூரம் வரை மேற்குக்கரை ஓரமாய்ப் பரவியிருப்பதால் இதற்கு மேற்குமலைத் தோடர்ச்சி என்று பெயர் வந்தது. இத்தொடர் திருவாங்கூர் ராஜ்யத்தை ஒட்டியிருப்பதால் இதற்குத் திருவாங்கூர் மலைகள் என்றும் பெயருண்டு. இம்மலைத்தொடர் அதிக உயரமுள்ளது. இதில் தேக்கு முதலிய பல பெரிய மரங்கள் வளரும். யானைகளும் ஏராளமாய் உண்டு. இதன் ஒரு பாகம் ஏலக்காய் மலைகள்.

1. பழநி மலை:—இது மேற்குத் தொடர்ச்சியின் ஒரு கிளைதான். இதன் நீளம் சுமார் 50 மைல். இம்மலையின் ஒரு பாகமாகிய கோடைக்கானல் மலைக்குத்தான் அமெரிக்க, ஐரோப்பிய மிஷனரிகளும், உத்தியோகஸ்தர்களும் தேகசவுக்கியத்திற்காகக் கோடைகாலத்தில் போய் வருகிறார்கள். இது கடல் மட்டத்துக்கு மேல் 7000 அடி உயரமுள்ளது. இதில் ஏராளமான காப்பித் தோட்டங்களும்,

பேரிக்காய்த் தோட்டங்களும் உண்டு. உங்கள் ஊரில் ஒரு அணு கொடுத்து வாங்கும் பேரிக்காயைக் கொடைக் கானலில் காலணுவிற்கும் குறைச்சலாகவே வாங்கலாம். கடுகு, ஏலம், உருளைக்கிழங்கு, தேயிலை, சீமைக்கிரை வகைகள் அங்கு மிகுதியாய் வளரும்.

3. உயர்ந்த வாவிமலை—பழனி மலைக்கு 30 மைல் தூரத்தில் தென் கிழக்குப் பக்கமாய் இருக்கிறது. பழனி மலைக்கும், இதற்குமிடையிலுள்ளதே கம்பம் பள்ளத்தாக்கு.

4. இருப்புப் பாறை—இது மதுரையிலிருந்து 15-மைல் வடக்கே இருக்கிறது. ஸ்படிகப் பாறை என்பது இதன் சமீபத்திலுள்ள ஒரு குன்று.

5. வருஷநாடு ஆண்டிப்பட்டி மலைகள்—வருஷ நாடு ஆண்டிப்பட்டி என்னும் இரண்டு ஊர்களை அடுத்திருப்ப தால் இவற்றிற்கு இப்பெயர் வந்தது. இவை தென் கிழக் காய்த் திரும்புகையில் இவற்றிற்கு நாகமலை என்று பெயர். இவற்றில் ஏராளமான மழை பெய்கிறது. வைகை இங்கே தான் உற்பத்தியாகிறது. மலையின் நீளம் சுமார் 50-மைல்.

6. சிறுமலை—இதன் நீளம் சுமார் இருபது மைல். இது அதிகச் செழிப்பான மலைகளில் ஒன்று. ஆனல் மலைக்காய்ச்சல் உண்டாகக்கூடிய இடம். இம்மலையில் உண் டாகும் வாழைப்பழங்கள் மிகப்பிரசித்தமானவை. தேனில் ஊறப்போட்டு, இவை பெரும்பாலும் ஐரோப்பாவிற்கு அனுப்பப்பட்டு வருகின்றன. காப்பி, ஏலக்காய்த் தோட் டங்களும் இங்கு உண்டு.

7. திண்டுக்கல்குன்று—இதன் மேல் ஒரு கோட்டை யுண்டு இப்போது இதில் ஒருவரும் குடியில்லை. முன்

காலத்தில் இதில் துப்பாக்கி மருந்துச்சாலை இருந்தது. இதன் உயரம் 300 அடி.

பழநி மலையின் கிழக்கில் நத்தம் என்ற ஒரு கிராமம் இருக்கிறது. அக்கிராமத்தைச் சுற்றி நான்கு திசைகளிலும் நான்கு மலைகளுண்டு. அந்த ஊருக்கு வடக்கில் இருப்பது தான் கரண்டமலை. இதே மாதிரியாய்க் கிழக்கில் சிறுமலையும், தெற்கில் அழகர் மலையும், மேற்கில் நத்தம் மலையும் இருக்கின்றன.

8. அழகர்மலை:-இது மதுரைக்குவடக்கே 12-மைல் தூரத்தில் இருக்கிறது. இதன் அடிவாரத்தில் தான் கள்ளழகர் கோவில் இருக்கிறது. இதில் மரம் அடர்ந்த காடுகள் உண்டு.

9. ஸ்கந்தமலை:-பசுமலைக்குத் தென்மேற்கே இரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது. இதன் மேல் ஒரு ஹிந்து கோவிலும், முகம்மதிய கோரியும் உண்டு. குடிப்பதற்கு அங்கு நல்ல ஜலம் கிடைக்கும். இதற்குச் சிக்கந்தர்மலை என்றும் பெயர்.

10. யானைமலை—இது தூரப்பார்வைக்கு ஒரு யானையின் உருவத்தை ஒத்திருப்பதால் இதற்கு இப்பெயர் வந்தது. மதுரைக்கு வடக்கே 6 மைல் தூரத்தில் இது இருக்கிறது.

11. பசுமலை—மதுரைக்கும், இம்மலைக்கும் இரண்டு மைல் தூரம். இதில் அநேகவிதமான உலோகங்கள் இயற்கையில் அகப்படுகின்றன.

12. நாகமலை—இது ஆண்டிப்பட்டி மலைகளின் தொடர்ச்சி. மதுரையின் மேற்கில் பத்துமைல் தூரத்தில் இருக்கிறது. இதில் மாஞ்செடிகள் விசேஷமாய்க்கிடையா.

கடைசியிற் சொல்லப்பட்ட மூன்றும் அநேக வருஷங்களுக்கு முன் மதுரையை அழிக்கும்படி சமணர்களால் ஏவப்பட்ட யானை, பசு, நாகம் மூன்றும் வதையுண்ட இடமாகப் புராணம் சொல்லப்படுகிறது.

## ஏரிகள்.

இந்த ஜில்லாவிலுள்ள ஏரிகள் எல்லாம் மிகச் சிறியவை. ஜனங்கள் தங்கள் உபயோகத்திற்காக ஆங்காங்கு வெட்டிக் கொண்டவைகளே அல்லாமல் இயற்கையில் அமைந்தன அல்ல.

**பெரியாற்று ஏரி:**—நமது கருணை தங்கிய கவர்ன்மெண்டார் மிகுந்த திரவியம் செலவழித்து, இந்த ஏரியை உண்டாக்கி இருக்கிறார்கள். இந்த ஏரியில் இருந்துதான் பெரியாற்றுக்குத் தண்ணீர் வருகிறது. இந்தஏரி கட்டப்பட்டுச் சில வருஷங்களே ஆகின்றன.

**மாடக்குளத்து ஏரி:**—இது மதுரையிலிருந்து இரண்டு மைல் தூரத்திலுள்ளது. இது உடைந்தால் மதுரைக்கு அழிவு உண்டாகும் என்று சொல்லுவார்கள்.

## நதிகள்.

மழை காலத்தில் இந்த ஜில்லாவில் மழை ஏராளமாய்ப் பெய்கிறது. மேற்கேயுள்ள மலைப்பிரதேசங்களில் மற்ற பாகங்களைப் பார்க்கிலும் மழை அதிகம். ஆனால் ஆறுகள் அதிகமாய் இல்லை. கோடை காலத்தில் இந்த ஜில்லாவின் முக்கிய நதியாகிய வைகையிலும் ஜலம் கிடையாது.

**வைகை**—இதுதான்இந்தஜில்லாவின் பெரியநதி. இது பெரியகுளம் தாலுகாவிலுள்ள வருஷநாடு-ஆண்டிப்பட்டி மலைகளில் உற்பத்தியாகி வடகிழக்காய் அத் தாலூகாவி

ளுள்ள வண்ணும்பட்டி என்னும் ஊருக்கு வடமேற்கே இரண்டு மைல் தூரத்திலிருந்து தென்கிழக்காய்த் திரும்பி, நிலக்கோட்டைத் தாலூகா, மதுரைத் தாலூகாக்களின் வழியாய்ப் பாய்ந்து இராமநாதபுரம் ஜில்லாவில் பிரவேசித்து, ஆற்றங்கரை என்ற ஊருக்குச் சமீபத்தில் கடலில்விழுகிறது. ஒரு நதி சமுத்திரத்தில் விழுமிடத்திற்கு, முகத்துவாரம் என்று பெயர். இதன் உபநதிகள்: சுருளிநதி, தேனீ நதி, வராக நதி, மஞ்சள் நதி என்பவைகளே. வைகைக்கு வேகவதி என்றும் பெயருண்டு. ஏனெனில் மழை காலத்தில் இதில் தண்ணீர் வேகமாய்ச் செல்லும். வைகை என்று இதற்குப் பெயர் வந்ததற்குக் காரணம்:—

மதுரையில் சொக்கருக்கும், மீனாட்சி அம்மனுக்கும் கலியாணம்நடக்கையில் சொக்கருடன்வந்தகுண்டோதரனது தீராத தாகத்தைத்தீர்க்க இது வரவழைக்கப்பட்டதென்பர். நதி வந்ததும், சொக்கர் அவனை அதில் நீர்குடிக்க வை கை (அதாவது கையை வை) என்றதால் இந்த நதிக்கு வைகை என்ற பெயர் வந்ததாம்.

பெரியாறு-இது திருவாங்கூர் ராஜ்யத்தில் ஒருவருக்கும் உதவாமல் காட்டுவழியாய்ஓடிக்கொண்டிருந்தது. சுமார் இருபத்திரண்டு வருஷங்களுக்கு முன், பென்னிங் விக், என்பவரது விடாமுயற்சியால் அதற்கு ஓர் அணைகட்டி, அந்நீரைத் தேக்கி, ஆங்கில ராஜ்யத்திலுள்ள தரிசு நிலங்களில் பாய்ச்ச ஏற்பாடு செய்யப்பட்டது. இந்த ஏற்பாடு செய்ததால் நீர்வளம் அதிகரித்து நமது கவர்ன்மெண்டுக்கும், நமக்கும் அதிக லாபம் ஏற்பட்டிருக்கிறது.

## பெரியாறு பிராஜெக்ட்.




அணைகட்டித் தேக்கிய தண்ணீரை மலையில் புதிதாய் துளைத்த ஒரு சுரங்கத்தின் வழியாய் விரவனுறு மூலம் சுருளி ஆற்றில் கலக்கும்படி ஏற்பாடு செய்யப்பட்டு, அந்தத் தண்ணீர் முழுவதும் வைகை ஆற்றின் வழியாய்ச் சென்றுவிடாமல், நிலக்கோட்டைத் தாலூகாவிலுள்ள அணைப்பட்டி என்னும் கிராமத்திற்கு அருகில் ஓர் அணையிலிருந்து பிரிக்கப் படுகிறது. அங்கிருந்து வரும் நீர்தான் பன்னிரண்டு சிறு கால்வாய்களின் மூலமாய் மேலூர்த் தாலூகா வரையுள்ள நிலங்களுக்குப் பாய்ச்சப் படுகிறது.

இந்த ஏற்பாட்டில் அநேகபுன்செய்களை நன்செய்களாக மாற்றிவிட்டார்கள். முன் ஒரு போகங்கூட விளையாத நிலங்கள் எல்லாம் இப்போது மூன்று போகங்கள் விளைகின்றன. இதனல் துரைத்தனத்தார் நமக்காக எவ்வளவு பாடுபட்டு நன்மை செய்து இருக்கின்றூர்கள் பார்த்தீர்களா?

குண்டாறு:—இது மேற்குத் தொடர்ச்சிமலையின் ஒரு பாகத்தில் உற்பத்தியாகி, திருமங்கலம் தாலூகாவின் வழியாய்ப்பாய்ந்து, இராமநாதபுரம் ஜில்லாவில் பிரவேசித்துக் கடலில் விழுகிறது.

வரிசிலை ஆறு:—இது இந்த ஜில்லாவில் வடபாகத்தில் உற்பத்தியாகி மேலூர்த் தாலூகாவில் பாய்ந்து, இராமநாதபுரம் ஜில்லா வழியாய் ஓடிக் கடலில் விழுகிறது.

இவைகளே முக்கியமான ஆறுகள். இனி வேறு சில சிற்றாறுகளும், ஓடைகளும் இருக்கின்றன. அமராவதி, ஷண்முகநதி, நன்கங்கை, குடவனாறு ஆகிய இவற்றில் அமராவதி, ஷண்முகநதி, நன்கங்கைஆகியமூன்றும் பழநி மலைகளிலும், குடவனாறு திண்டுக்கல் தாலூகாவிலுள்ள மலைகளிலும் உற்பத்தியாகி, வடக்குநோக்கிக் கோயம்புத்தூர்ஜில்லாவிற்குப் போகின்றன.

கிருதமலை:—இது வைகையின் கிளைநதிகளிற்பெரியது. இது வைகையினின்று பிரிந்துபோய்ப் பல கண்மாய்களை நிரப்புகிறது.

---

## சீதோஷ்ண ஸ்திதி.

சீதம் என்றால் குளிர்ச்சி. உஷ்ணம்என்றால்சூடு. ஸ்திதி என்றால்நிலைமை. ஓரிடத்தின்சீதோஷ்ணஸ்திதியைப்பற்றிப் பேசும்பொழுது, அந்த இடத்தில் இப்போதுஉஷ்ணம், இப்போது குளிர்ச்சி, இப்போது அதிக உஷ்ணம், இப்போது அதிகக் குளிர்ச்சி, என்று சொல்லுவதுதான் சீதோஷ்ண ஸ்திதி என்பதற்குப் பொருள்.

இந்த ஜில்லாவில் மலைகளில் எப்பொழுதும் குளிர்ச்சி அதிகமாகத்தான் இருக்கிறது. மற்ற பாகம் கோடைகாலத்தில் அதிகஉஷ்ணமாய்இருக்கிறது. வருஷத்தில் அதிகஉஷ்ணமான மாதங்கள், மார்ச்சு, ஏப்ரல், மே, ஜூன் தான். ஆகஸ்டு, செப்டம்பர், அக்டோபர், நவம்பர் மாதங்களில் காலமழைபெய்யும். மே, ஜூன் மாதங்களில் சில வருஷங்களில் கோடை மழை பெய்வதுமுண்டு. காலமழை தவறினால் ஜனங்கள் மிகவும் கஷ்டப்படுவார்கள்.

## விளைபொருள்கள்.

1. மலைப்பிரதேசம்—இதில் தேக்கு, வேங்கைமுதலிய பெரிய மரங்களும், வாழை, காப்பி, தேயிலை, உருளைக்கிழங்கு முதலியவைகளும் உண்டாகின்றன.

2. கரிசல் தரை—இங்குப் பருத்தி, காணம், வரகு ஆகிய இவைகள் உண்டாகின்றன.

3. நீர்வளமுள்ள பாகம்—இதில் நெல்தான் முக்கியமாய்ப் பயிரிடப்படுகிறது. இன்னும் எள்ளும், சோளமும், தினையும், கேழ்வரகும் உபாயமாய்ப் பயிரிடப்படுகின்றன.

4. நீரில்லாத செவ்வல்—இங்கு நிலக்கடலை, சோளம், துவரை, உளுந்து, கொஞ்சம் கம்பு ஆகியஇவைகள்பயிரிடப்படுகின்றன.

5. பள்ளத்தாக்கு—இந்த ஜில்லாவில் பள்ளத்தாக்குத்தான் மிகவும் செழிப்பான பாகம். ஆகையால் அதில் அநேகமாய் எல்லாம் விளையும்.

ஆற்றங்கரையின் ஓரங்களில் தென்னைமரங்கள் விசேஷமாய் உண்டாகின்றன. திண்டுக்கல் தாலூகாவில் நல்ல புகையிலை உண்டாகின்றது.

உயிர்ப்பிராணிகள்—யானை, புலி, ஓநாய், நரி, காட்டுப் பசு முதலிய காட்டுப் பிராணிகளும், பசு, எருமைகளும், பருந்து, கழுகு, வல்லூறு, ஆந்தை, கிளி, மைனு, புறு, காடை, கவுதாரி, கொக்கு, காகம், கோழி, வாத்து முதலிய பக்ஷிகளும் மற்ற ஜில்லாக்களில் இருப்பன போலவே இந்த ஜில்லாவிலும் உண்டு.

உலோகங்கள்—இவை பூமியினின்றும் எடுக்கப்படுகின்றன. ஏராளமான இரும்பு, அபிரகம், உப்பு, மரவுப்புமுதலியவைகளும், பழநிமலையின் பக்கத்தில் கொஞ்சம் பொன்னும் இந்த ஜில்லாவில் கிடைக்கின்றன. மேலூர்த்தாலுகா கோட்டாம் பட்டியில் இரும்பு அதிகமாய்க்கிடைக்கிறது. பசுமலைக் குன்றில் சீமைச் சுண்ணும்பு இயற்கையில் கிடைக்கும்.

## கைத்தொழிலும் வர்த்தகமும்.

தொழில்கள்—பயிரிடுதல், நெசவு, சாயம்ஏற்றல், தோல் பதமிடுதல், ஆடுமாடுகள் மேய்த்தல், வெண்கலப் பாத்திரங்கள் செய்தல், சுருட்டுச் செய்தல் ஆகிய இவைகளே இந்த ஜில்லாவாசிகளின் முக்கியமான தொழில்கள்.

ஏற்றுமதி—திண்டுக்கல் சுருட்டு, காப்பிக்கொட்டை, பூட்டுகள், தோல், அரிசி, நல்லெண்ணெய், பிண்ணுக்கு, பருத்தி, பருத்திநூல், சாயத்துணிகள், சரிகைவஸ்திரங்கள், சாலைக் கற்கள் முதலியன.

இறக்குமதி—இரும்பு ஆயுதங்கள், சாயச் சரக்குகள், சீமைத் துணிகள், கிரேஸின் ஆயில், (மண் எண்ணெய்) கண்ணுடிச் சாமான்கள், ஷாப்புச் சாமான்கள், பாக்கு, உப்பு, மிளகு, இஞ்சி, முதலியவை வெளியிடங்களிலிருந்து இந்த ஜில்லாவுக்கு அனுப்பப்படுகின்றன.

## போக்குவரவு சாதனங்கள்.

### இருப்புப்பாதை.

வடக்கே சென்னையில் இருந்து தனுஷ்கோடிக்குப் போகும் இருப்புப்பாதை இந்த ஜில்லாவின் வழியாகப்போகிறது. அதன் ஒரு கிளைப்பாதை மதுரை ஜங்ஷனிலிருந்து தூத்துக்குடிக்கும் திருநெல்வேலிக்கும் போகிறது. இன்னொரு கிளைப்பாதை உசிலம்பட்டி வழியே போடிநாயக்கனூருக்குப் போகிறது. இந்தப் பாதை போனவருஷம்தான் போடப்பட்டது. இன்னொரு கிளைப்பாதை திண்டுக்கல்லில் இருந்து பழநிக்குப் போடப்பட்டிருக்கிறது. இது போன வருஷமே முடிவுபெற்றது. இந்தப் பாதை ஏற்பட்டதால் திண்டுக்கல் ஒரு ஜங்ஷன் ஆனது. பொதுவாக இந்த ஜில்லாவிற்கு இருப்புப் பாதை வசதி உண்டென்று சொல்லலாம். இந்த ஜில்லாவில் முக்கிய பாதையிலுள்ள ஸ்டேஷன்கள்:— அய்யலூர், வடமதுரை, திண்டுக்கல் ஜங்ஷன், கொடைக்கானல் ரோட், சோழவந்தான், சமயநல்லூர், மதுரை ஜங்ஷன், கீழ்மதுரை.

மதுரை - தூத்துக்குடி - பாதையிலுள்ள ஸ்டேஷன்கள்- பசுமலை, திருப்பரங்குன்றம், கப்பலூர், திருமங்கலம், கள்ளிக்குடி.

திண்டுக்கல்—பழநி - பாதையிலுள்ள ஸ்டேஷன்கள்— அக்கரைப்பட்டி, ரெட்டிச்சத்திரம், பலகனூத்து, ஒட்டன் சத்திரம், சத்திரப்பட்டி, கணக்கன்பட்டி, பழநி.

மதுரை—போடிநாயக்கனூர் - பாதையிலுள்ள ஸ்டேஷன்கள்—நாகமலை, செக்கானூரணி, வாவாந்தூர், உசிலம்பட்டி தொட்டப்பநாயக்கனூர், ஆண்டிப்பட்டி, வள்ளல்நதி ரோடு, தேனி, பூதிபுரம், போடிநாயக்கனூர்.

## வண்டிப்பாதை.

1. மதுரையிலிருந்து திருப்பரங்குன்றம், கப்பலூர், திருமங்கலம், ஸ்ரீவில்லிபுத்தூர் வழியாய்த் திருநெல் வேலிக்குப் போகும் ரஸ்தா ஒன்று இருக்கிறது.

2. மதுரையிலிருந்து போகும் முன்சொன்ன ரஸ்தா விலிருந்து திருமங்கலத்தில் பிரிந்து, கள்ளிக்குடி விருதுநகர் வழியாய்த் திருநெல்வேலிக்கு மற்றொரு பாதை செல்லு கிறது. அது இருப்புப் பாதையை ஒட்டியே போகிறது.

3. மதுரையிலிருந்து இராமநாதபுரத்துக்குஒருபாதை இருப்புப் பாதைச்குச் சமீபமாய்ப் போகிறது.

4. மதுரையிலிருந்து சோழவந்தான், அம்மையநாயக் கனூர், திண்டுக்கல் வழியாய்த் திருச்சிராப்பள்ளிக்கும் ஒரு பாதை போகிறது.

5. மதுரையிலிருந்து யானைமலை, மேலூர் வழியாய் வடகிழக்கே ஒரு பாதை சிவகங்கை ஜமீன் வழியாய்ப் போகிறது. இவற்றில் சில ரஸ்தாக்கள் ராணி மங்கம்மாள் போட்டவை.

## ஜனங்கள்.

1931-வது வருஷ ஜனசங்கைக்கணக்குப்படி இந்த ஜில் லாவின்ஜனத்தொகைசற்றுக்குறைய22லட்சம். சுற்றியுள்ள இடங்களிலிருந்து வியாபார முதலியவற்றிற்கு வந்தவர்கள் இந்தஜில்லாவில்அதிகம். ஆகையால்இந்தியாவிலுள்ள எல்லா ஜாதியாரும் இங்கு இருக்கிறார்கள். நமது ஜில்லாவில் சதுர மைலுக்குச் சராசரி 447 ஜனங்கள் வீதம் வசிக்கிறார்கள். தாலூகாக்களில் மதுரைத்தாலூகா அதிக ஜன நெருக்க முள்ளது. கொடைக்கானல் தாலூகா ஜன நெருக்கம்

குறைந்தது. நமது ஜில்லாவில் கள்ளர்கள் என்ற ஜாதியார் அதிகஊக்கமும்உழைப்பும்உள்ளவர்கள்.துரைத்தனத்தார் இவர்கள் முன்னேற்றம் கருதிக் கள்ளர் ஸ்பெஷல் ஆபீஸை ஏற்படுத்தி அவர்களுக்குக் கல்வியும் கைத்தொழிலும் விவசாயமும் கற்றுக்கொடுத்து முன்னடையச் செய்கிறார்கள். இவர்கள் பிரமலைக்கள்ளர்கள். இவர்களும், வலையர் என்ற மூப்பர்களும் திருமங்கலம் தாலூகாவில் மிகுதி.

ஸௌராஷ்டிரர் என்ற ஜாதியார் நெசவு வேலை நடத்திக்கொண்டு மதுரை நகரில் விசேஷமாய் வசிக்கிறார்கள். அவர்கள் வெகு காலத்திற்கு முன்பு குஜராத் மாகாணத்திலிருந்து இங்கு வந்தவர்களாம். இவர்கள் மதுரை நகரின் ஜனத்தொகையிற் பாதி இருக்கிறார்கள். இவர்கள் பட்டு நூல் நெசவிலும் ஜவுளி வியாபாரத்திலும் சிறந்தவர்கள். இவர்கள் மதுரையில் ஒரு ஹைஸ்கூல் ஏற்படுத்தியிருக்கிறார்கள். (மேலூர் பழநித் தாலூகாக்களில் முகம்மதியரும், திண்டுக்கல் கொடைக்கானல் தாலூகாக்களில் கிறிஸ்தவர்களும் மிகுதியாய் வசிக்கிறார்கள்.)

மறவரும் இந்த ஜில்லாவில் உண்டு. நாட்டுக்கோட்டைச் செட்டிகள் என்ற ஜாதியார் இந்த ஜில்லாவிலே, மதுரையில் கொடுக்கல்வாங்கலும், வியாபாரமும் செய்கிறார்கள். அவர்களுடைய வீடு வாசல்கள் பெரும்பாலும் இராமநாதபுரம் ஜில்லா ஊர்களில் இருக்கின்றன.

மதம்—அநேக ஜாதி இந்துக்களும் இந்த ஜில்லாவில் வசிக்கிறார்கள். மொத்தம் ஜனத்தொகையில் நூற்றுக்கு 92 பேர் இந்துக்கள். முகம்மதியர் நூற்றுக்கு நாலு பேர். கிறிஸ்தவர்கள் நூற்றுக்கு சிறிது குறைய நாலுபேர்.



ஸ்ரீமீனாட்சி அம்மன் கோவில். [பக்கம் 54]

பாஷை—இந்த ஜில்லாவில் முக்கிய பாஷை தமிழே. தெலுங்கும் கன்னடமும் இந்துஸ்தானியும் சிறிது பேசப் படுகின்றன. ஸௌராஷ்டிர பாஷையை அந்த ஜாதியார் பேசுகிறார்கள் மற்ற ஜில்லாக்களில் போலவே இங்கும் இங்கிலீஷ் பாஷை ஊக்கத்துடன் கற்கப்படுகின்றது.

## முக்கிய பட்டணங்கள்.

### 1. மதுரைத் தாலூகா.

இந்த ஜில்லாவிலுள்ள மற்ற தாலூகாக்களைப் பார்க்கிலும் இது சிறிது. இந்தத்தாலூகா மேற்கே மேடாகவும், கிழக்கே போகப்போகத் தாழ்ந்தும் இருக்கிறது. வைகை இத்தாலூகாவின் மத்தியில் செல்லுகிறது.

எல்லைகள்—இந்தத்தாலூகாவின் எல்லைகளைப் படத்தைப்பார்த்துச் சொல்லுங்கள். இங்குள்ள குன்றுகளையும் நதிகளையும் படத்தில் பார்த்துச் சொல்லுங்கள்.

மதுரை—இது ஒரு முனிஸிபல் பட்டணம். இந்நகரின் பெரும்பாகம் வைகையின் தென்கரையிலும்,சிறுபாகம்வட கரையிலும் இருக்கிறது. இது இந்த ஜில்லாவின் தலைநகரம். இதுவே நமதுராஜதானியில் ஜனத்தொகையிலும், பருமனிலும் இரண்டாவது பட்டணம். இங்கிருந்து எந்த எந்தத் திசையில் எந்த ஊர்களுக்கு இருப்புப் பாதைகள் செல்லுகின்றன? முன் காலத்தில் இது பாண்டிய நாட்டின் தலைநகராயிருந்தது. இதில் அநேக நேர்த்தியான கட்டிடங்கள் உண்டு. நகரின் நடுவில் மீனாட்சியம்மன் கோவிலும், அதில் உள்ள ஆயிரக்கால் மண்டபமும், பொற்றாமரை என்ற அழகிய

தடாகமும், பல வியாபாரக்கடைகள் இருக்கும் புதுமண்டபமும், கூடலழகர்கோவிலும். எட்வர்ட் பார்க்கும் (Edward park) தமுக்கம்பங்களாவும் பார்க்கத்தக்கவை. ஊரின்தென் கிழக்குப் பாகத்தில் திருமலைநாயக்கர் அரண்மனை இருக்கிறது. இந்த நகரின் கிழ்ப்பாகத்தில் திருமலை நாயக்கராற் கட்டப்பட்ட ஒரு தெப்பக்குளம் இருக்கிறது. இது தென்னிந்தியாவிலுள்ள குளங்களிற் பெரியது. இந்நகரில் கிறிஸ்தவஆலயங்களும், முகம்மதியபள்ளிவாசல்களும்சில உண்டு.

இவைகளைத்தவிர முதல் வகுப்பு மதுரை காலேஜும், வைகையின் வட கரையிலுள்ள முதல் வகுப்பு அமெரிக்கன் காலேஜும், 6 ஹைஸ்கூலும் இருக்கின்றன. இன்னும் கவர்ன்மேண்டு மிஷன் ஆஸ்பத்திரிகளும் பஞ்சாபீசும் உண்டு. மதுரை கலெக்டர் ஆபீஸும் இராமநாதபுரம் கலெக்டர் ஆபிஸ் முதலியனவும் இங்கேயே இருக்கின்றன.

இந்த நகரில் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு திருவிழா நடக்கும். அவைகளில் முக்கியமாய்ச் சித்திரைத் திருவிழா, பிட்டுத்திருவிழா, தெப்பத்திருவிழாக்களுக்குச் சுற்றுப் பக்கங்களில் இருந்து ஆயிரக்கணக்கான ஜனங்கள் வந்து போவார்கள்.

ஆதியில் இந்த ஊரில் பாண்டியர்களால் ஆதரிக்கப்பட்ட மூன்று தமிழ்ச் சங்கங்கள் இருந்தன. இப்போது காலஞ்சென்ற ஸ்ரீ பாண்டித்துரைச்சாமித்தேவர் அவர்களால் ஏற்படுத்தப்பட்ட மதுரைத் தமிழ்ச்சங்கம் தழைத்து வருகின்றது. சமஸ்கிருத பாஷையில் வேதாத்தியயனம் நடைபெறும் இரண்டு பாடசாலைகளும், இராமேசுவர சமஸ்கிருத பாடசாலைகளும் இங்கு உள்ளன.



திருமலை நாயக்கர் மஹால்.

[பக்கம் 56]



திருப்பரங்குன்றம் கோவில். [பக்கம் 57]

இந்த ஊரில் ஸௌராஷ்டிரர் மிகவும் அதிகம். அவர்களுடைய பாஷைதான் ஸௌராஷ்டிரபாஷை. அவர்கள் மிகவும் நேர்த்தியான வஸ்திரங்கள் நெய்து, அநேக இடங்களுக்கு அனுப்புகிறார்கள். சாயத்தொழிலும் இந்த ஊரில் அதிகமாய் நடைபெற்று வருகின்றது. இந்த முனிசிபாலிடியார் நகரம் முழுதும் மின்சார விளக்குகள் ஏற்படுத்தி இருக்கிறார்கள். எல்லாரும் குளிக்கும்படியான புதிய ஒரு குழாய்க் கட்டிடமும் நிர்மித்திருக்கிறார்கள்.

பசுமலை—இது மதுரைக்குத் தெற்கே 3-மைல் தூரத்திலுள்ள ஒரு ரயில்வே ஸ்டேஷன். இங்கு ஹைஸ்கூலும், டிரைனிங் ஸ்கூலும், மாடல் ஸ்கூலும், கிறிஸ்தவ மதப் பள்ளிக்கூடமும், நூல் நூற்கும் சாலையும் உண்டு. இங்குள்ள கிணற்றுத் தண்ணீர் குடிப்பதற்கு இனிமையாயிருப்பதால், மதுரை வாசிகள் பலர் இந்த நீரை வண்டிகளில் கொண்டுபோவார்கள். ரஸ்தாக்கள் போடுவதற்கு இங்கிருக்கும் குன்றிலிருந்து சரளைக்கல் உடைத்துக் கொண்டுபோகப்படுகிறது.

திருப்பரங்குன்றம்—இது ஒரு சிறந்த சுப்பிரமண்ய ஸ்தலம். கார்த்திகை யன்று அநேக ஜனங்கள் பல இடங்களிலிருந்து இங்கு வந்து போவதுண்டு. சிக்கந்தர் என்ற ஒரு முகம்மதியருடைய சமாதியும் இங்குள்ள ஸ்கந்தர் மலையின் ஒரு பாகத்தில் உள்ளது, அங்கு முகம்மதியர்கள் அடிக்கடி செல்வார்கள்.

வெள்ளியகுன்றம் சிறுவாலை—இவை இரண்டும் இத் தாலூகாவிலுள்ள ஜமீன் ஊர்கள்.

யானைமலை—மதுரைக்கு வடக்கே 6 மைல் தூரத்தில் இருக்கிறது. இதில் ஆதி காலத்தில் கட்டப்பட்ட ஒரு விஷ்ணு கோயில் இருக்கிறது. இக்கோயிலில் பழையபாண்டியர் கல்வெட்டுகள் இருக்கின்றன. மலையில் ஜயின விக்கிரகங்கள் இருக்கின்றன.

---

## II. திருமங்கலம் தாலூகா.

இந்தத் தாலூகா முழுவதும் கரிசல் நிலங்களால் ஆகியது. ஆதலால் இதில் பருத்தி ஏராளமாய்ப் பயிரிடப்படுகிறது. இங்கு விசேஷமான ஆறுகள் இல்லை. கிணற்று நீரை இறைத்துத்தான் விவசாயம் நடத்துகிறார்கள்.

இந்தத்தாலூகா இந்த ஜில்லாவின் எந்தப் பாகத்தில் இருக்கிறது? இங்கு ஓடும் நதியும் இருப்புப்பாதையும் எத்திசையை நோக்கிச் செல்லுகின்றன?

திருமங்கலம்—இது குண்டாற்று நதிக்கரையில் இருக்கிறது; ஒரு ரயில்வே ஸ்டேஷன். இப்போது இந்த ஊர் பெரிதாகிக் கொண்டு வருகிறது. இங்கு வெள்ளிக்கிழமைகளில் ஒரு பெரிய சந்தை கூடுகிறது. பஞ்சாலை இங்கு ஒன்று உண்டு. முனிசிப் கச்சேரியும், தாலூகாக் கச்சேரியும், முசாபரி சத்திரமும், வைத்தியசாலையும், அமெரிக்கன் மிஷன் டிரயினிங் கலாசாலையும், பல எலிமெண்டரிப் பாடசாலைகளும் இங்கு உண்டு. திருமலை நாயக்கர் கட்டிய சிறு மண்டபம் ஒன்று இதற்கு அருகிலிருக்கிறது. இவ்வூர் நாடார்கள் ஏற்படுத்திய ஹைஸ்கூலும் போர்டு முதல்தர எலிமெண்டரிப் பாடசாலையும் இவ்வூரில் இருக்கின்றன.

விக்ரமமங்கலம்—இது திருமங்கலத்துக்கு வடமேற்கில் உள்ள சிவஸ்தலம். இங்குள்ள சிவன் கோவில் இடிந்து கிடக்கிறது.

உசிலம்பட்டி—இது ஒரு யூனியன் டவுனும் ரயில்வே ஸ்டேஷனும் ஆம். இங்கே டிவிஷனல் ஆபீஸர் கச்சேரியும், சப்ரிஜிஸ்டரார் கச்சேரியும், போர்டு ஹைஸ்கூலும், தபாலாபீஸும் உண்டு. புதன்கிழமைகளில் இங்கு ஒரு பெரிய சந்தை கூடும்.

கள்ளிக்குடி—திருமங்கலத்திலிருந்து9-மைல் தெற்கே இருக்கிறது. இது ஒரு ரயில்வே ஸ்டேஷன். சப் ரிஜிஸ்டரார் கச்சேரியும், ஒரு லோக்கல்பண்டு சத்திரமும் இங்கு உண்டு. இதைச்சுற்றி விளையும் பருத்தி வியாபாரத்திற்கு இது மத்திய இடமாயிருக்கிறது. இதற்கு மேற்கே கற்பாறை ஒன்று உண்டு. அதில் ஒருவிதமான சிறந்த கல் வெட்டி எடுக்கப்படும்.

ஆனையூர்—இங்கு ஒரு சிவாலயமும், குளமும் உண்டு. தேவேந்திரனுடைய வெள்ளை யானையாகிய ஐராவதம் ஒரு காலத்தில் கருவத்தினால் கறுப்புநிற மாயிற்றென்றும், இவ்வூர்க் குளத்தில் குளித்ததால், திரும்பவும் தன்னுடைய பழைய வெள்ளை நிறம்பெற்று இங்கு வெகுகாலம் வசித்திருந்ததென்றும் சொல்லுகிறார்கள்.

நடுக்கோட்டை, மேலக்கோட்டை, உத்தமநாயக்கனூர், ஏழுமலை, சாப்டூர், பேரையூர், சந்தையூர் முதலியன இத்தாலூகாவின் முக்கிய ஜமீன்கள்.

## III. பெரியகுளம் தாலூகா.

இதுதான் மதுரை ஜில்லாவிலுள்ள தாலூகாக்களில் பெரியது. இதற்கு ஆதியில் தேன்கரைத் தாலூகா என்று

பெயர். மற்றெல்லாத் தாலூகாக்களிலும் இது மிகச் செழிப்பானது. ஜமீன்களை அதிகமாய்க் கொண்டது இதுவே. பெரியாறு ஏற்பட்டபிறகு இத்தாலூகாவின் தென்பாகம் செழிப்பா யிருக்கிறது. இது அதிக ஜன நெருக்கமுள்ள தாலூகா அன்று. இந்தத் தாலூகாவிற்கு மேற்கிலுள்ள திருவாங்கூர் மலைகளில் உண்டாகும் காப்பி, ஏலக்காய், சந்தனக்கட்டை முதலியன இங்கு வியாபாரமாகின்றன.

இந்தத் தாலூகாவின் எல்லைகளைப் படத்தைப்பார்த்துச் சொல்லுங்கள். இங்குள்ள மலைகளும் நதிகளும் எவை யென்று படத்தைப் பார்த்துச் சொல்லுங்கள்.

பெரியகுளம்—இது வராக நதிக்கரையில் இருக்கிறது. இந்த ஊருக்குச் சமீபத்திலுள்ள ஒரு பெரிய குளத்தி லிருந்து இப்பெயர் இதற்குவந்தது. -இது ஒரு சிவஸ்தலம். இங்கே டிஸ்டிரிக்ட் முனிஸீப் கச்சேரி, தாலூகாக் கச்சேரி சப் போஸ்டு ஆபீஸ் இவைகள் இருக்கின்றன. இதில் ஒரு போர்டு ஹைஸ்கூலும் உண்டு.

போடிநாயக்கனூர், கண்டமநாயக்கனூர், வடகரை, தேவாரம்—இவைகள் இங்குள்ள முக்கியமான ஜமீன்கள். போடிநாயக்கனூரில் ஒரு ஹைஸ்கூல் இருக்கிறது.

சின்னமனூர்—இது ஒரு யூனியன் டவுன். சுமார் 600 வருஷங்களுக்கு முன் முகம்மதியரால் தோற்கடிக்கப்பட்ட காலத்தில், இங்கு வந்து தங்கிய ராஜஸிம்ம பாண்டியன் கட்டிய ஒரு கோவில் உண்டு. இங்குப் பிராமணர்களும், முகம்மதியர்களும் விசேஷமாய் இருக்கிறார்கள். இவ்வூரில் உள்ள சில செப்பேட்டுச் சாசனங்கள் சரித்திரக்காரருக்கு மிகவும் அவசியமானவைகள்.

மாவூற்று—இது கண்டமநாயக்கனூருக்குச் சமீபத்தில் மலையிலுள்ள ஊற்று. இதில் வேலப்பர் கோவில் உண்டு.

கம்பம்—இது ஒரு யூனியன் டவுன். இங்கு முசாபரி சத்திரம் உண்டு. இதில் வசிக்கும் ஜனங்களின் பெரும்பாலார் கன்னடம் பேசும் காபிலியர்கள்.

கோம்பை—இது திருவாங்கூர் மலையில் உள்ளது. இவ்வூர் சிறந்த நாய்களுக்குப் பெயர் பெற்ற இடம்.

தேவதானப்பட்டி—இதில் பேர்பெற்றகாமாட்சியம்மன் கோவில் உண்டு. அந்த அம்மன் மிகவும்சக்திஉள்ளதென்று சொல்லுகிறார்கள். அந்தக் கோவில் அநேகமாய் எப்போதும் சாத்தியேதான் இருக்கும். பூஜை கதவுக்கே நடக்கிறது. கோவிலின் மூலஸ்தானம் கூரைக் கட்டிடத்தால் ஆனது. அதைப் பழுதுபார்க்கவேண்டுமானால் அம்மனுடைய உத்தரவு வேண்டுமாம்.

உத்தமபாளையம்—சுருளிநதியின் தென்பாகத்தில் இருக்கிறது. கம்பம் பள்ளத்தாக்குக்குப் போகும்வழியில் பெரியகுளத்திலிருந்து 28 மைல் தென்மேற்கில் உள்ளது. டிப்டி தாசில்தார் ஆபீஸும், சப்ரிஜிஸ்டர்கச்சேரியும் பிரயாணிகள் தங்கும் சத்திரமும் இங்கு உண்டு. இங்கு டிஸ்டிரிக்ட் போர்டு ஹைஸ்கூல் இருக்கிறது. செல்வத்திலும் ஜனத்தொகையிலும் இதுமுன்னேறிவருகிறது. இங்குள்ளகாளாஸ்திரி கோவில் பிரசித்திபெற்றது. இக்கோவிலுக்கு இராணி மங்கம்மாள் மானியம் விட்டிருப்பதாகப் பட்டா இருக்கிறது. இன்னும் இதிலுள்ள திரௌபதிஅம்மன் கோவில் திருவிழாவில் வருஷத்துக்கு ஒருமுறை பூக்குழி இறங்கல் உண்டு.

வீரபாண்டி, மார்க்கயன்கோட்டை, வடகரை, தேவாரம், இராசக்கநாயக்கனூர் முக்கியமான வேறு இடங்கள், மார்க்கயன்கோட்டையில் விளையும் சம்பாநெல் மிகவும் பிரசித்திபெற்றது.

## IV. கொடைக்கானல் தாலூகா.

இந்தஜில்லாவில் இதுதான் மிகவும் மலையடர்ந்த தாலூகா. இதில் முக்கியமான இடம் கொடைக்கானல். இது பழநி மலையின் ஒரு பாகத்தில் இருக்கிறதென்று முன்னமேயே சொல்லியிருக்கிறோம். இங்கே பாம்பாறு உற்பத்தியாகிறது.

இத்தாலூகாவின் எல்லைகளைப் புஸ்தகத்தில் உள்ள படத்தைப் பார்த்துச் சொல்லுங்கள்.

கோடைக்கானல்—இந்த டவுனுக்கு ரயில் மார்க்கம் இல்லை. கோடைக்கானல் ரோட் என்ற அம்மையநாயக்கனூரில் இறங்கித்தான் இங்குவரவேண்டும். இது 300 அடி உயரமுள்ள மலைமேல் இருக்கிறது. இது ஒரு முனிஸிபல் டவுன். இங்கு மழை அதிகம். இங்கு ஓர் ஏரியும், நீர் அருவியும், ப்ரைன்ட்பார்க்கும், நட்சத்திரசாலையும், கோக்கர்ஸ் வாக்கும் (Coaker's Walk) தூண்மலையும் (Pillar Rocks) காணத்தக்க காட்சிகள். இவைகளைத்தவிர இவ்விடத்திற்கு அநேக ஐரோப்பியரும், நம் நாட்டுப் பணக்காரர்களும் குளிர்ச்சிக்காக வருகிறார்கள் என்றும், ஐரோப்பிய காய்கறிகள் அதிகமாய் விளைகின்றன என்றும் முன்னமே படித்திருக்கிறீர்கள். ரோமன் காத்தலிக் கிறிஸ்துவர் வைத்த பாடசாலையும், பல பங்களாக்களும் இங்கு உண்டு.

---




பழனிக் கோவில். [பக்கம் 63]

## V. பழநித் தாலூகா.

இதன் ஏராளமான பாகம் செவ்வல் தரையாயும் ஒன்றுக்கும் உதவாததாயும் இருக்கிறது. மற்றதாலூகாக் களைக் காட்டிலும் இங்கு மழை குறைச்சல். இங்கு முக்கிய விளைபொருள் சோளமும்,கம்பும்,புகையிலையும்,காணமுமே. கிணற்று நீர்பாய்ச்சி ஜனங்கள் புன்செய்ப் பயிர்களை விளைவிக்கிறார்கள்.

இத்தாலூகாவின் தெற்கிலுள்ள தாலூகாக்கள் எவை? இத் தாலூகாவில் ஓடும் நதிகள் எந்தத் திசையை நோக்கிச் செல்கின்றன?

பழநி—இது இத்தாலூகாவின் முக்கியமான முனிஸி பல் டவுனும், ரயில்வேஸ்டேஷனுமாம். இங்குள்ள சுப்பிர மண்யர் கோவில், தென் இந்தியாவிலே மிகவும் சிறப்பு அமைந்தது. இதற்கு அநேக இந்து யாத்திரிகள் வருவார் கள். அவர்களில் காவ்டி எடுத்துப் பிரார்த்தனை செலுத்து வோர் அதிகமானபேர்கள். இங்கு முகம்மதியர்களும் வந்து வணங்கிச் சர்க்கரை வழங்குவார்களாம். பழநிபாவா என்ற பக்கிரி அங்கு சமாதி பெற்றிருப்பதாக முகம்மதியர்கள் சொல்லுகிறார்கள். வையாபுரிக்குளம், மலை, பழநி ஆண்ட வர் கோவில் முதலியன இங்கு பார்க்கத்தக்கவை. இந்த சுவாமிக்கு அபிஷேகமாகும் பஞ்சாமிருதம் மிகச்சிறந்தது. இங்குத் தாலூகாவுக்கு வேண்டிய கச்சேரிகளும், முனிஸி பல் ஹைஸ்கூலும் ஆஸ்பத்திரியும், சத்திரங்களும் இருக்

கின்றன. இது ஒரு சிறந்த வியாபார ஸ்தலம். கோயம் புத்தூருக்கும் இவ்வூருக்கும் அதிக வியாபாரம் நடக்கிறது. இது பழநிக்கு மேற்கே 150 மைல் தூரத்தில் இருக்கிறது.

விருப்பாட்சி—இது ஒரு பெரிய கிராமம். வாரந்தோறும் இங்கு மிகப் பெரிய சந்தைகூடும். இது மிகவும் உருசி யுள்ள வாழைப்பழத்துக்குப் பேர் பெற்ற இடம்.

ஐவர்மலை—இந்தப் பெயருள்ள மலையின் உச்சியில்இது இருக்கிறது. இங்கு முன் காலத்தில் பாண்டவர்கள் வந்து தங்கினுர்கள் என்று சொல்லுகிருர்கள். ஆதலால் இதற்கு இப்பெயர் கிடைத்ததாம். இம்மலையின் உச்சியில் பிள்ளையார் கோவில் இருக்கிறது. ஐவர்சிலைகளும் இங்குள்ளன.

கீரனூர்—இது பழநிக்கு வடக்கே 10 மைல் தூரத்தில் உள்ளது. இங்கு முகம்மதியர் மிகுதி. இது வெற்றிலை வியாபாரத்திற்குப் பெயர்பெற்றது. இதில் சுமார் 800 வருஷங்களுக்குமுன் கட்டிய சிறுகோட்டை ஒன்றுள்ளது.

கலையம்புத்தூர்—பழநியிலிருந்து மேற்கே 3 மைல் தூரத்திலிருக்கிறது. இவ்வூரில் பல வருஷங்களுக்கு முன் ரோமதேசத்து நாணயங்கள் அகப்பட்டன. அதனுல் ஆதியில் ரோமாபுரியில் இருந்து ஜனங்கள் நமது நாட்டுக்கு வந்து போயிருக்க வேண்டுமென எண்ணப்படுகிறது.

ஆய்க்குடி, மாம்பாறை, இடையகோட்டை—இவை இங்குள்ள முக்கிய ஜமீன்கள்.

பாலசமுத்திரம், குமாரபாளையம்—இத்தாலூகாவிலுள்ள மற்ற பெரிய ஊர்கள்.

---

## VI. திண்டுக்கல் தாலூகா.

இந்தத் தாலூகாவில் மழை மிகவும் சொற்பம். ஆதலால் நதிகளும் கொஞ்சமே. மலை விளைச்சலும், புகையிலையும் இங்கு அதிகமாய் உண்டாகின்றன. இத்தாலூகா வடக்கே தாழ்ந்திருப்பதால் நதிகள் வடக்கே ஓடுகின்றன.

எல்லைகள்—வடக்கே திருச்சிராப்பள்ளி, கிழக்கே திருச்சிராப்பள்ளி ஜில்லா, மேலூர்த் தாலூகா, தெற்கே நிலக்கோட்டைத் தாலூகா, மேற்கே கொடைக்கானல் பழநித்தாலூகாக்கள்.

சிறுமலை, திண்டுக்கல் பாறை, வராகமலை இந்தத் தாலூகாவின் எந்த இடத்தில் உள்ளன?

மஞ்சள்நதி, குடவனாறு எத்திசையில்செல்லுகின்றன?

திண்டுக்கல்—இது இத்தாலூகாவின் தலைநகர். இந்த ஊரை அடுத்துள்ள குன்றின்மேல் ஒரு கோட்டை இருக்கிறது. இதன் படம் அடுத்த பக்கம் இருக்கிறதுபாருங்கள். இது பூமிமட்டத்திற்கு மேல் 950 அடி உயரத்தில் இருக்கிறது. இந்தப் பட்டணத்தின் பெயர் திண்டு என்ற அரசனால் வந்ததாம். இது ஒரு ரயில்வே ஜங்ஷனும், முனிஸிபல் டவுனுமாகும். இதில் இறங்கித்தான் பழநிக்குப் போகவேண்டும். புகையிலைச் சுருட்டு, மலை வாழைப்பழம், வெண்கலப்பாத்திரங்கள், இருப்புச்சாமான்கள், பூட்டுகள், பெட்டிகள் தோல் முதலியன இங்கிருந்து ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இங்கு முனிஸிபல் ஹைஸ்கூல், ரோமன் காத்தலிக் ஹைஸ்கூல், செக்கண்டரி கிரேட் டிரயினிங் கலாசாலை, முனிசிப் கோர்ட், சப்ரிஜிஸ்டர் கச்சேரி ஆகிய இவைகள் இருக்கின்றன. இது மைசூர்ச் சண்டையில் குறிப்பிடப்பட்ட இடம். இதில் தபால் தந்தி ஆபீசுகளும், ஆஸ்பத்திரியும் உண்டு.

கன்னிவாடி—இது திண்டுக்கல்லில் இருந்து மேற்கே 10-மைல் தூரத்திலிருக்கிறது. இது நமது ஜில்லாவிலுள்ள, சரித்திர சம்மந்தமான பெரிய ஜமீன் ஊர். இதில் ஒரு போர்டு பாடசாலை உண்டு. இது வாழைப்பழத்துக்குப் பெயர் பெற்றது.

அம்பாத்துறை—இது ஒரு ரயில்வே ஸ்டேஷன். இதில் நெசவுத் தொழில் நடக்கிறது. இது ஆதிகாலத்தில் பாளையப்பட்டாய் இருந்தது.

எரியோடு—இது மைசூர் சண்டையில் ராணுவம் தங்கிய இடமாம்.

வேடசேந்தூர்—இது இத்தாலூகாவின் வடக்கிலுள்ள ஒரு யூனியன் டவுன். டிப்டி தாசில்தார் கச்சேரியும், சப்ரிஜிஸ்டர் ஆபீசும், தபாலாபீசும் உண்டு. இதற்குச் சமீபத்தில் நல்ல புகையிலை விளைகிறது.

பலக்கனூத்து—இது திண்டுக்கல்லில் இருந்து பழநிக்குப் போகும் பாதையிலிருக்கிறது. இதில் சத்திரமும் முசாபரி பங்களாவும் உண்டு. இதற்குச் சமீபத்தில் தங்கம் கலந்த மணல் கிடைக்கிறது. இது ஒரு ரயில்வே ஸ்டேஷன்.

அகரம்—இது திண்டுக்கல்லுக்கு வடக்கே 6-மைல் தூரத்தில் இருக்கிறது. இங்குள்ள முத்தியாலு அம்மன் கோவிலில் ஐப்பசிமாதம் திருவிழாவுக்கு ஆயிரக்கணக்கான ஜனங்கள் வருவார்கள்.

ஆத்தூர்—இது பழநிமலையின் அடிவாரத்தில் ஆத்தூர்க் கரையில் முகப்பில் உள்ளது. வண்டி காளியம்மன் கோவில் இங்குப் பேர் பெற்றது.

இவைகளைத் தவிர தவசிமடை, சுக்காம்பட்டி, எமக் கலாபுரம் முதலியன முக்கிய ஊர்கள். தாடிக்கொம்பு திண்டுக் கல்லுக்கு வடக்கே 5 மைல் தூரத்திலுள்ள ஒரு விஷ்ணு ஸ்தலம். இங்குள்ள சுவாமிக்குச் சுந்தராஜப் பெருமாள் என்று பெயர். அக்கோயிலில் மஹா விஷ்ணுவின் அவதா ரங்களைக் குறிக்கும் கற்சிலைகளுள்ளன.

## VII. நிலக்கோட்டைத் தாலூகா.

இதுதான் இந்த ஜில்லாவின் மத்தியிலுள்ள தாலூகா. இந்தத் தாலூகாவிலுள்ள அணைப்பட்டி என்னுமிடத்தில் வைகைக்குக் கட்டப்பட்ட அணையிலிருந்து பெரியாற்றின் கால்வாய்களின் வழியாய்த் தண்ணீரைப் பிரிக்கிறார்கள்.

இத்தாலூகாவுக்கு வடக்கிலும், கிழக்கிலும் சிறு மலை களும், அழகர் மலையும், தெற்கில் நாகமலையும், மேற்கில் ஆண்டிப்பட்டி மலையின் ஒருபாகமும் இருக்கின்றன. இது மிகவும் நீர் வளமுள்ள தாலூகா.

இதற்குக் கொஞ்ச தூரத்திற்குக்கிழக்கே வைகையின் குறுக்கே பேரணை சிற்றணைகள் கட்டப்பட்டிருக்கின்றன. பேரணை சிற்றணைகளாகிய இவ்விரண்டும் சுமார் 350வருஷங் களுக்கு முன் நம்மை ஆண்ட விசுவநாத நாயக்கரால் கட்டப் பட்டன.

நமது ஜில்லாவில் இந்தத்தாலூகாவுக்கு எந்தத் தாலூ காக்கள் எல்லையாகவும் எது எல்லையாக இல்லாமலும் இருக்கின்றன?

நிலக்கோட்டை—இது இந்தத்தாலூகாவில் முக்கிய மான இடம். அம்மையநாயக்கனூரில் இருந்து கொடைக் கானலுக்குப் போகும் பாதையில் இருக்கிறது. இதைச் சுற்றி மண்கோட்டை கட்டியிருந்ததால், இப்பெயர் இதற்கு உண்டாயிற்று. இங்குத் தாலூகாவுக்கு வேண்டிய கச்சேரி கள் இருக்கின்றன.

சோழவந்தான்—சோழ தேசத்தைப்போல் செழிப்பா யிருப்பதால் இதற்குச் சோழவந்தான் (சோழவம் தான்) என்ற பெயர் வந்தது என்கிறார்கள். வைகையாற்றின் கரை யில் இது இருக்கிறது. ராணி மங்கம்மாள் இராமேசுவரம் போகின்ற பிரயாணிகளுக்குக் கட்டிய சத்திரம் ஒன்று இங் குண்டு. இங்கு ஏராளமான தென்னந்தோப்புகள் இருக்கின் றன. இது ஒரு ரயில்வே ஸ்டேஷன். இதன் பழையகாலத் துப் பெயர் சோழாந்த சதுர்வேத மங்கலம் என்பதாம். இங்கு ஒரு போர்டு ஹைஸ்கூல் புதிதாய் ஏற்படுத்தப் பட்டிருக்கி றது. ஷண்முகம்பிள்ளை என்ற சிறந்த தமிழ் வித்துவான் இவ்வூரில் பிறந்தவர்.

அம்மையநாயக்கனூர்--இதற்குக் கோடைக்கானல் ரோட் என்றும் பெயர். இந்த ஸ்டேஷனில் இறங்கிப் பிறகு மோட்டார் ஏறி, ஜனங்கள் கொடைக்கானலுக்குப் போகி றார்கள். 1736-ஞ் நாயக்கருக்கும், சண்டா சாஹீப்புக்கும் நடந்த சண்டையில், சண்டா சாஹீப் இவ்வூருக்குச் சமீபத் தில் ஜயம் அடைந்தார். இது இப்பெயருள்ள ஜமீனில் முக் கியமான ஊர்.

திருவேடகம்—இது வைகையின் வடகரையில் இருக் கிறது. திருஞான சம்பந்தர் மடமும், சுந்தரபாண்டியர் கட் டிய கோவிலும் இவ்வூரில் விசேஷம். ஞானசம்பந்தர் சமணர்

களுடன், வாதுசெய்கையில் அவர் வைகையில்விட்ட ஏடு இங்குக் கரை ஏறினதாம். இந்த வரலாற்றை இந்தஜில்லா சரித்திரத்திற் காண்க.

மேட்டுப்பட்டி-இது நிலக்கோட்டைக்கு 6-மைல்தூரத்தில் தெற்கே வைகைநதிக்கரையிலிருக்கிறது. இதற்குச் சமீபத்திலுள்ள சித்தர்மலையில் பாண்டவரின் படுக்கை இருக்கிறதாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள்.

வத்தலக்குண்டு—கொடைக்கானலுக்குப் போகிறவர்களில் சிலர் இங்குத் தங்கிப்போவார்கள். இங்குச் சம்பா நெல் அதிகமாய் விளைகிறது. இதற்குச் சமீபத்தில் ஒரு புராதனமான கோட்டை பாழாய் இருக்கிறது. ஹைதர் அலி 1760ம் வருஷம் இங்கு நடந்த சண்டையில் தோற்றுப் போனான். இங்கு ஒரு போர்ட் ஹைஸ்கூல் நடைபெறுகிறது.

## VIII. மேலூர்த் தாலூகா.

இது இந்த ஜில்லாவில் கிழக்குப் பாகத்தில் இருக்கிறது. பெரியாற்று வாய்க்காலால் இதன் பெரும்பாகம் நீர் பாய்ச்சப்படுகிறது. அந்த நீர்ப்பாய்ச்சல் ஏற்படுமுன் இத்தாலூகாவின் பெரும்பாகம் தரிசு நிலமாய் இருந்தது. இப்போது தரிசெல்லாம் நஞ்செய்களாக மாற்றப்பட்டு சாகுபடி செய்யப்படுகின்றன. இத்தாலூகா ஐந்தில் ஒரு பாகம் காடுகளாக நிறைந்திருக்கிறது.

இந்தத் தாலூகாவின் மேற்கு எல்லையையும் இதிலுள்ள மலைகளையும் ஆறுகளையும் படத்தைப் பார்த்துச் சொல்லுங்கள்.

மேலூர்—இது மதுரைக்கு வடகிழக்கே 18 மைல் தூரத்திலிருக்கிறது. தாலூகாவிற்குவேண்டிய பல கச்சேரிகளும், பிரயாணிகள் தங்கும் சத்திரமும் இங்குண்டு. இது வரவரப் பெரிய பட்டணமாகின்றது. மேலூர் டிவிஷனல் ஆபீஸ் தற்போது மதுரையில் இருக்கிறது. இவ்வூருக்குச் சமீபத்தில் ஒரு பெரிய ஆல்மரம் பார்ப்பதற்கு அழகாயிருக்கிறது. ஒரு காலத்தில் கள்ளர்களுடைய ராஜதானியாய் இருந்ததாம். இங்கே ஒரு போர்டு ஹைஸ்கூல் புதிதாய் வைக்கப்பட்டிருக்கிறது.



அழகர் கோவில்.

அழகர் கோவில்—இது மதுரைக்கு வடக்கே 12 மைல் தூரத்தில் உள்ள ஒரு சிறந்த வைஷ்ணவ ஸ்தலம். இங்கு அழகர் என்னும் சுந்தராஜப் பெருமாள் கோவில் இருப்ப

தால் இதற்கு இப்பெயர் கிடைத்தது. இக்கோவில் மலேயடிவாரத்தில் இருக்கிறது. ஈங்குத் திருமலே நாயக்கரால் கட்டப்பட்ட பழமையான கட்டிடங்கள் பல இருக்கின்றன. இது முன் பெரிய ஊராய் இருந்தது. இப்போது எல்லாம் காடாய்க் கிடக்கிறது. இங்குண்டாகும் மலேக் காய்ச்சலே இதற்குக் காரணம் என்று நம்பப்படுகிறது. இந்தக் கோவிலிலுள்ள அழகர் ஒவ்வொரு வருஷத்திலும் சித்திரைமாதப் பௌர்ணமியில் மதுரைக்கு வருகிறார். இந்தக் கடவுளிடத்தில் கள்ளர்களுக்கு விசேஷ பக்தி உண்டு. மலேயில் ஒரு சிற்றருவி உண்டு. இதில் வருகிற தீர்த்தம் காசித்தீர்த்தம் என்பது புராணப் பிரசித்தம். இங்குச் சாயச் சரக்குகள் விளேகின்றன.

திருவாதவூர்—இது மேலூருக்குத் தெற்கே 6-மைல் தூரத்தில் இருக்கிறது. இது பாண்டியனிடம் ஒரு காலம் மந்திரியாயிருந்த மாணிக்கவாசக சுவாமிகள் பிறந்த இடம். அவர் திருவாசகம் திருக்கோவையார் என்ற சிறந்த தமிழ் நூல்களேப் பாடினர். மாணிக்கவாசகர் சரித்திரம் உங்களுக்குத் தெரியுமா?

நத்தம்—இது ஒரு யூனியன் டவுன். சிறுமலேக்கும் அழகர் மலேக்கும் மத்தியில் கணவாயில் இருக்கிறது. இதில் ஒரு பாடசாலேயும், சப் ரிஜிஸ்டர் ஆபீசும், ஒரு பழைய கோட்டையும் உண்டு. இவ்வூரில் கள்ளர் வாசம் மிகுதி. எண்ணெய் வியாபாரம் இங்கு அதிகம்.

கோட்டாம்பட்டி—இங்குச் சிறிது இரும்பு அகப்படுகிறது. முற்காலத்தில் ராமேசுரம் செல்லும் யாத்திரிகர்களுக்குத் தங்குமிடமா யிருந்தது.

**மதுரை ஜில்லா பூகோளசாஸ்திரம் முற்றிற்று.**

# மதுரை ஜில்லா சரித்திரம்.

## கற்கால மனிதர்.

நமது ஜில்லா பழைய பாண்டிய நாட்டின் ஒரு பாகம். அப்பாண்டிநாடு இப்போதுள்ள மதுரை இராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களேயாகும். இந்த ஜில்லா சென்னை ராஜதானியின்தென் பாகத்தில் இருக்கிறது. மதுரை என்ற தலைநகரின் பெயரால் இந்த ஜில்லா முழுவதும் மதுரை ஜில்லா என்று சொல்லப்படுகிறது. ஆதிகாலத்தில் நமது ஜில்லா முழுவதும் மரங்கள் அடர்ந்த காடாயிருந்தது. அக்காலத்தில் நாகரீகமற்ற ஒருவகைஜாதியார் இங்கு வசித்தார்கள். அவர்களுக்கு இரும்பு முதலிய ஊலோகங்களாற் செய்யப்பட்ட கத்திமுதலிய ஆயுதங்கள் கிடையா. அவைகளுக்காகக் கருங்கல்லாற்செய்யப்பட்டஆயுதங்களையே அவர்கள் உபயோகித்து வந்தார்கள். அவர்களில் இறந்துபோனவர்கள் அவ் ஆயுதங்களுடன் கல்லறைகளில் புதைக்கப்பட்டார்கள். அக்கல்லறைகள் சில இப்போது நமதுஜில்லாவில் சில இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டன. இம்மனிதருக்குக் கற்கால மனிதர்கள் என்று பெயர்.

## மதுரை ஸ்தாபகம்.

இவ்வாறு கற்கால மனிதர்கள் வசிக்கையில், வட இந்தியாவிலிருந்து ஆரியர் என்ற ஜாதியார், அங்கு வசிப்பதற்கு இடம் போதாமல் தெற்கே வந்து இங்குள்ள காடுகளை வெட்டிக் குடியேறினார்கள். அவர்களில் யமுனை நதிக்கரையிலுள்ள மத்ரா என்னும் பட்டணத்தில் வசித்தவர்கள் ஒரு பட்டணத்தை (மதுரையைக்) கட்டி, அவர்கள்

முன் வசித்த ஊரின் பெயராகிய மத்ரா என்ற பெயரையே இட்டார்களென்றும், அதுவே பின்னால் மதுரா என ஆன தென்றும் சரித்திரக்காரர் அபிப்பிராயப் படுகிறார்கள். ஆனால் இவ் விஷயத்தைப்பற்றி இன்னொரு வரலாறும் உண்டு. திருநெல்வேலி ஜில்லாவில் தாம்பிரவர்ணிநதிமுகத் துவாரத்திலுள்ள கொற்கை என்னும் பட்டணத்தைத் தலைநகராக்கிக்கொண்டு, பாண்டியன் என்னும் அரசன் இந் நாட்டை ஆண்டு வந்தான். அவனுடைய இரண்டு சகோத ரர்களாகிய சோழனும், சேரனும் புது நாடுகளை நியமிக்க எண்ணி, அங்கிருந்து புறப்பட்டுப் போய்ச் சோழ, சேர நாடுகளை ஸ்தாபித்தார்கள். பாண்டியன் கொற்கையிலேயே இருந்து விட்டான். பின்னிருந்த அரசர்கள் அவ்வரசன் சந்ததியார்களே யாவர்.

கொற்கையைத் தவிர வேறு பட்டணங்கள் வேறு வேறு சமயங்களில் தலைநகர்களாக ஆனதுமுண்டு. ஒரு காலத்தில் திருநெல்வேலி ஜில்லா கலியாண புரத்திலிருந்த குலசேகர பாண்டியன் இந்நாட்டை ஆண்டு வந்தான். அப் பொழுது கடம்பவனத்தின் நடுவில் சோமசுந்தரக்கடவுள் ஸ்வயம்புவாய்த் தோன்றி அடியார்களுக்குக் கிருபை செய்து வருகையில், ஒருநாள் அப்பாண்டியனுடையசொற் பனத்தில் தோன்றித் தான் எழுந்தருளிய இடத்தில் கோ விலைக் கட்டும்படி உத்தரவு செய்தாராம். குலசேகரன் கோ விலைக் கட்டி முடித்தபிறகு அதைச்சுற்றிலும் ஜனங்கள் குடியேறினார்கள். அவ்விடத்திற்கு என்ன பெயரிடுவ தென்று குலசேகரன் யோசிக்கையில், கடவுள் மறுபடியும் அவன் முன் தோன்றி, ஆனந்தத் தாண்டவம் ஆடினாராம்.

அப்பொழுது அவர் தலையிலிருந்த மதுரமான கங்கை நீர் நாலா பக்கங்களிலும் சிதறியபடியால் இந்நகருக்கு மதுரை என்று பெயரிடலாயிற்றும்.

## பூர்வீக பாண்டியர்கள்.

பாண்டியர் என்னும் பட்டப் பேருடைய அரசர்கள் சுயேச்சையாய் ஆயிரக்கணக்கான வருஷங்களாய்க் கிறிஸ்துவுக்குப் பின் 2 நூற்றாண்டு வரை இந்நாட்டை நன்றாய் ஆண்டார்கள். அவர்களுடைய காலத்தில் வேறு வேறு சமயத்தில் தமிழ்ச்சங்கங்கள் இங்கிருந்தன. அவற்றில் கடைசித் தமிழ்ச்சங்கம் உக்கிரப் பெருவழுதிப் பாண்டியன் காலத்திலிருந்தது. அக்காலத்தில் தான் நக்கீரர், சாத்தனார் முதலிய 49 தமிழ்ப்புலவர்கள் இருந்தார்கள். கடைசித் தமிழ்ச் சங்கம் மட்டும் இப்போதுள்ள மதுரையிலிருந்தது. முதற் சங்கம் இருந்த இடம் கடலில் மூழ்கிப்போயிற்று. ஆகையால் அதிலுள்ள புத்தகங்களும் கடலில் மூழ்கிப் போயின. கடைசிச் சங்க நூல்களைப் படித்துப்பார்த்தால் மற்ற தேசத்தார்கள் நாகரிக மில்லாதவர்களா யிருந்த காலத்தில், கல்வி, கைத்தொழில், நாகரிகம், வியாபாரம் முதலியவற்றால் நம் நாட்டார்கள் மிகவும் சிறந்தவர்களாய் இருந்தார்கள் என்பது தெரிகிறது.

பாண்டிய சிற்றரசர்கள் (200—900—கி. பி.) இவ்வாறிருக்கையில் வடக்கிலிருந்து வந்த பல்லவர் பாண்டியர்களை ஜெயித்து அவர்களைத் தங்களுக்குக்கப்பம் கட்டும்படி செய்தார்கள். அவர்களுடைய வம்சத்தைச் சேர்ந்தவர்கள் வன்னியர் படையாச்சி முதலியோர் என்கிறார்கள்.

கோதாவரி நதிக்கரையிலுள்ள வங்கி இப்பல்லவர்க்குத் தலை நகராய் இருந்தது. இவர்கள் நம் நாட்டை 700 வருஷங்கள் ஆண்டு வந்தார்கள். இவர்களில் மகேந்திர வர்மன் மதுரைக்கு 5-மைல் தூரத்திற்கு மேற்கில், வைகையிலிருந்து பிரிந்து போகும் பல்லவ வாய்க்காலை வெட்டினான். இப்பல்லவ வம்சத்தார் வியாபார முதலியவற்றை விருத்திசெய்து நாட்டை நன்றாய் ஆண்டார்கள்.

அப்பால் இவர்களிலும் பலிஷ்டராகிய சாளுக்கியர் இவர்களை வென்று, இவர்களிருந்த இடத்திலிருந்து இவர்களைத் துரத்திவிட்டார்கள்.

இவ்வாறு துரத்தப்பட்ட இவர்கள்காஞ்சிபுரம் அடைந்து, தாங்கள் சமண மதத்திற் சேர்ந்ததும் அல்லாமல் தங்கள் சிற்றரசர்களான பாண்டியன் முதலியவரையும் பின்பற்றச் செய்தார்கள். பாண்டியரும் அவர் பிரஜைகளும் சமணராய் இருந்தபொழுது, அவர் மனைவி மங்கையர்க்கரசி மாத்திரம் இந்து மதத்தையே தழுவினாள். அக்காலத்தில் சீர்காழியில் அவதரித்த திருஞானசம்பந்தர் மதுரை அடைந்து, சமணர்களால் சொஸ்தப்படுத்த முடியாத கூன் பாண்டியருடைய ஜ்வரத்தைச் சொஸ்தப்படுத்தி, அவரை ஹிந்துவாக்கிச் சமணர்களைப் பல வாதுகளில் வென்று, அவர்களைக் கழுவேறச் செய்தார்.

அப்பால் சமண மதத்தைப் பரவச்செய்த பல்லவர்களைப் பாண்டியர் வென்று, அவர்களைச் சிற்றரசராக்கிக் கொண்டு மிகச் சொற்பகாலம் ஆண்டார்.

சோழ பாண்டியர்கள் (கி. பி. 900—1200—) அதன் பின்பு சோழர்கள் பாண்டியர்களை வென்று, இந்நாட்டைச்

சுமார் 300 வருஷங்கள் வரை ஆண்டார்கள். பராந்தகன் (906—946 கி. பி.) என்ற சோழனும், இராஜ இராஜேசுவர சோழனும் அவர்களில் முக்கியமானவர்கள். அவர்களை ஜெயிக்கவேண்டுமென்று பாண்டியர்கள் எவ்வளவு முயன்றும் சரிப்படவில்லை. இவ்வரலாற்றைக் கீரனூர்க்கோவிலில் உள்ள சாசனத்தால் அறியலாம். சோழநாட்டையும்பாண்டி நாட்டையும் சேர்த்து ஆண்ட சோழர்கள் சோழ பாண்டியர் என்ற பட்டம் வைத்துக்கொண்டார்கள்.

இவ்வாறிருக்கையில் பழைய பாண்டிய வம்சத்தைச் சார்ந்த மாறவர்மசுந்தர பாண்டியர் சோழனை ஜெயித்துப் பாண்டிய நாட்டைச் சுயேச்சையாய் ஆண்டார். அதற்குப் பிறகு வந்த ஜடவர்ம சுந்தரபாண்டியர் இலங்கையைப் படையெடுத்து ஜெயித்து, அங்கிருந்து மிகுந்த பொருள் கொண்டு வந்து தமது நாட்டிற்கு நன்மை செய்தார்.

இவ்வாருகப் பாண்டியர்கள் மறுபடியும் சுயேச்சையாய் நமது நாட்டை ஆண்டார்கள்.

முகம்மதியர்—15-வது நூற்ருண்டின் ஆரம்பத்தில் டெல்லியை யாண்ட அலாவுடீன் கில்ஜி என்பவனுடைய சேனைத் தலைவன் மாலிக்காபர் என்பவன் தென்னிந்தியாவைப் படையெடுத்து, அங்குள்ள அரசர்களை வென்றும், பொருள்களைக் கொள்ளையடித்தும், முகம்மதிய மதத்திற் சேராதவர்களைக் கொன்றும்வந்தான். அவன் இராமேசுவரம் வரையிற் சென்றதை அறிவிக்க அங்கு ஒருஜய ஸ்தம்பமும் கட்டினன். மாலிக்காபர் மதுரையை எதிர்த்தபோது ராஜசிம்ம பாண்டியர் அரசராயிருந்தார். அவர் மாலிக்காபருக்குப் பயந்து மதுரையைவிட்டு பெரியகுளத்துக்கு அடுத்த

சின்னமனூரில் மறைந்திருக்கும் பொழுது, அங்குள்ள ராஜசிம்மேசுவரர் கோவிலைக்கட்டினார். சின்னமனூர்க்கோவிலில் உள்ள தாம்பிர சாசனங்களால் இவ்விஷயம் நன்றாய்த் தெரிகிறது. மதுரையை ஜயித்த காபர் தனது ஆட்களில் ஒருவனை ஆளும்படி செய்துவிட்டான். அதன் பிறகு சுமார் 50 வருஷகாலம் எட்டுமுகம்மதிய அரசர்கள் நமது நாட்டை ஆண்டார்கள்.

ஹோயஸ்லோ—இப்பெயருடைய வம்சத்தைச் சார்ந்த ஹிந்து அரசர்களில்ஒருவர் துங்கப் பத்திரைக்கரையிலுள்ள ஹம்பியைத் தலைநகராக்கிக்கொண்டு,விஜய நகரராஜ்யத்தை ஸ்தாபித்துத் தென்னிந்தியாவிலுள்ளஎல்லா அரசர்களையும் தமக்குக் கப்பம் கட்டும்படி செய்தார். அவ்வரசர் மதுரையிலுள்ள முகம்மதியரைத் துரத்தும்படி தமதுசேனைத்தலைவரான கம்பன்னஉடையாரை அனுப்பினார். அவர் முகம்மதியரை மதுரையிலிருந்து துரத்திவிட்டார். அவர் வம்சத்தைச் சார்ந்தவர்களும், நாயக்கத் தலைவர்களும் விஜயநகரத் தரசனுக்குட்பட்டு இந்நாட்டை மேற்பார்த்து வந்தார்கள். எனினும், இடையே பாண்டியர்களும் ஆண்டார்கள். 1559ஆம் வீரசேகரசோழன் பாண்டியரைத் தோற்கடித்து இந்நாட்டைக் கைப்பற்றினான். பாண்டியனும், அவன் மகனும் விஜயநகரச் சக்கரவர்த்தியினிடம் போய் முறையிட்டுக் கொண்டார்கள். அவர் தமது சேனைத்தலைவராகிய நாகம நாயக்கரை அனுப்பித் தமக்குச் சிற்றரசனாயிருந்தும் தம் உத்தரவில்லாமல் மதுரையைக் கைப்பற்றிய சோழனைத் துரத்தி வரும்படி சொன்னார். நாகம நாயக்கர் அவ்வாறே செய்து, அரசனுடைய உத்திரவின்ப்டி நாட்டைப் பாண்

டியனிடம் ஒப்புவிக்காமல் தாமே ஆளத்தொடங்கினர். இச் செய்தியைக் கேள்விப்பட்ட விஜயநகரத் தரசருக்கு அடங் காத விசனமுண்டாகி, 'நாகமர் தலையைக் கொண்டு வரக் கூடியவர்கள் நமது சேனையில் யாராவது இருக்கிறார்களா?' என்று கேட்டார். மிக்க வல்லவராகிய நாகமரை எதிர்த் துச்செல்ல ஒருவராவது துணியவில்லை. கடைசியில் நாகம நாயக்கரின் மகனாகிய விசுவநாதநாயக்கர் தம் தகப்பனாரைத் தாமே சென்று எதிர்த்து ஜெயித்து வருவதாக ஒப்புக் கொண்டு புறப்பட்டார்.

விசுவநாதர் மதுரையை அடைந்து, தம்தகப்பனாரைத் தோற்கடித்து அவரைச் சிறைப்படுத்தி, அரசர் சமுகம் கொண்டு வந்து நிறுத்தினர். அரசர் மிகுந்த சந்தோஷ மடைந்து, தமக்கு வேண்டிய வெகுமதிகளைக் கேட்கும்படி விசுவநாதரை வேண்டினர். விசுவநாதர் தம் தகப்பனாரைக் கொல்லாமல், அவரை விடுதலை செய்யும்படி கேட்டார். அரசர் அப்படியே செய்ததோடு, விசுவநாதரை மதுரைக்கு சாஸ்வத கவர்னராக நியமித்தார்.

## நாயக்கர்கள்.

### விசுவநாதநாயக்கர்.

விசுவநாதரே மதுரையை ஆண்ட நாயக்க அரசர் களில் முதல்வர். அவர் அரசரானதும் மதுரையிலுள்ள பழங் கோட்டைச் சுவர்களை இடித்து 72-கொத்தளங்க ளுடன் புதுக்கோட்டையைக் கட்டினர். பல அக்கிரகாரங் களையும் நிர்மித்தார். மதுரையைச் சுற்றிய பாகங்களில் இருந்த தண்ணீர்க்கஷ்டத்தை நிவர்த்திப்பதற்காக வைகை யாற்றில், பேரணை சிற்றணைகளைக் கட்டி, அவ்வணைகளி

விருந்து கால்வாய்களின் வழியாய் ஜலத்தைத் திருப்பிக் கொண்டு வந்து, நாட்டைச் செழிப்பித்தார். இராமேசுவரம், ஸ்ரீரங்கம் முதலிய யாத்திரை ஸ்தலங்களுக்குப் போகும் பிரயாணிகளுக்கு உண்டாகும் திருடர் பயத்தை நீக்கினர். தமக்குச் சொந்தமான வல்லம் கோட்டையைச் சோழனுக்குக் கொடுத்துவிட்டு, அவருக்குச் சொந்தமான திரிச்சிராப்பள்ளிக் கோட்டையைத் தாம் பெற்று, அங்கிருந்தே இந்நாட்டை ஆண்டு வந்தார். விசுவநாதருக்குப் பிறகு திருமலைநாயக்கர் வரை உள்ள இவ்வரசர்கள் எல்லோரும் திருச்சிராப்பள்ளியிலேயே வசித்து வந்தார்கள்.

விசுவனுதருக்கு அரியநாயக முதலியார் என்ற சிறந்த மந்திரி ஒருவர் இருந்தார். இவரே மதுரை மீனுட்சியம்மன் கோவிலில் உள்ள ஆயிரக்கால் மண்டபத்தைக் கட்டினவர். இவரே இந்நாட்டை 72 பாளையப்பட்டுகளாய்ப் பிரித்து, ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பாளையக்காரனுக்குக் கொடுத்து விரோதிகள் வரும்போது அவனவன் தன் தன் சேனையுடன் வந்து நாட்டைக் காக்க வேண்டுமென்று ஏற்பாடு செய்தார்.

விசுவநாதர்காலத்தில் இருந்து திருமலைநாயக்கர்காலம் வரை பாண்டியர்கள் பேருக்கு மட்டும் அரசராயிருந்தார்கள். ஆனுல் நாட்டை ஆண்டது நாயக்கர்களே.

குமார கிருஷ்ணப்ப நாயக்கர்—விசுவநாதரின் மகனுகிய இவர் 10-ஞு நாட்டை ஆண்டார். இவர் காலத்தில் தும்பச்சி என்னும் ஒரு பாளையக்காரன் மதுரையை எதிர்த்தான். கிருஷ்ணப்பர் அவனைத் தோற்கடித்துக் கொன்ற

தோடு, அவனுக்கு உதவி செய்த கண்டிராஜனையும் ஜெயித்து, இலங்கைத் தீவைக் கைப்பற்றி அங்கு ஒரு கவர்னரை ஏற்படுத்திவிட்டுத் தம் நாட்டிற்குத் திரும்பினர்.

இவ்வரசர் அநேக அக்கிரகாரங்களையும், கோவில்களையும், நீர்ப்பாய்ச்சலுக்காகக் கால்வாய்களையும் வெட்டினர். இவ்வரசர் இறந்த பிறகு, இவருடைய இரண்டு புத்திரர்கள் சுமார் 12 வருஷம் நாட்டைப் பரிபாலித்தார்கள். இவர்களில் இளையவருடைய இரண்டு புத்திரர்கள் பட்டத்துக்கு வந்து ஏழு வருஷம் நாட்டைப் பரிபாலித்தார்கள். அவர்களுக்குப் பிறகு, முத்துகிருஷ்ணப்ப நாயக்கர் என்பவர் பட்டத்திற்கு வந்தார்.

முத்துக் கிருஷ்ணப்ப நாயக்கர்—இளவரசர் பட்டத்திற்கு வந்ததும், முன்பாண்டியனால் கவரப்பட்டசேதுநாட்டைச் சேதுபதி வம்சத்திலுதித்த ஒருவருக்குக்கொடுத்தார். அச்சேதுபதி மிகவும் நன்றியறிதலுள்ளவராய் இருந்ததால், 72—பாளையக்காரர்களுக்கும் தலைவராய் நியமிக்கப்பட்டார். இவ்வரசர் அநேக ஊர்களைக் கட்டினர். இவ்வரசரால் கட்டப்பட்ட ஊர் பசுமலையை அடுத்த கிருஷ்ணபுரம் ஆகும். அவ்வூர்பின்னல் பாழாயிற்று. அதற்குச்சமீபத்தில் அப்பெயருடைய ஒரு சிறு கிராமம் இப்போது புதிதாய்க் கட்டப்பட்டிருக்கிறது. இவ்அரசருக்கு மூன்றுபுத்திரர்கள் உண்டு. அவர்கள் 1. முத்துவீரப்பநாயக்கர், 2. பிரசித்திபெற்ற திருமலை நாயக்கர். 3. குமாரமுத்துநாயக்கர் என்றவர்கள்.

முத்துவீரப்பநாயக்கர்—நாட்டை 15வருஷம் ஆண்டார். அவர்காலத்தில்முகம்மதியர்இந்நாட்டைப்படையெடுத்துத்



திருமலை நாயக்கர்.

திண்டுக்கல்லை எதிர்த்தார்கள். அங்கிருந்த பாளையக்காரன் அவர்களை விரட்டிவிட்டான்.

## திருமலை நாயக்கர்.

அநேக இடங்களில் திருமலைநாயக்கரால் அநேகநேர்த்தியான கட்டிடங்கள் அமைக்கப்பட்டுள்ளன. மதுரையிலுள்ள திருமலை நாயக்கர் மஹால், வண்டியூர்த் தேப்பக்குளம், புது மண்டபம், ராஜகோபுரம் இன்னும் மீனாட்சியம்மன் கோவிலின் பலபாகங்கள் இவ்வரசராலேயே கட்டப்பட்டவை. புது மண்டபத்தில் விசுவநாத நாயக்கர் முதல் திருமலை நாயக்கர் வரையுள்ள நாயக்க அரசர்களின் சிலைகளைக் காணலாம்.

மதுரையிலுள்ள ராஜகோபுரத்தைப்போல் 64-கோபுரங்களைக்கட்ட இவர் ஆரம்பித்தார். ஆனால் மத்தியில்தோன்றிய சண்டைகளின் தொந்தரவால் இக்கோபுரங்களில் ஒன்றேனும் முடிவுபெறவில்லை. எந்நாட்டாரும் மதுரையிலுள்ள இவ்வரசரின் கட்டிடங்களைக்கண்டு மிகவும் ஆச்சரியப்படுகிறார்கள். திருமலைநாயக்கர் கோவில் சம்பந்தப்பட்ட கட்டிடங்களைக் கட்டியதற்கு ஒரு காரணமுண்டு.

தாம் அரசரான பிறகு, திருச்சிராப்பள்ளியிலிருந்து மதுரைக்கு வருகையில், திண்டுக்கல்லில் தங்கினதாகவும், அதற்கு முன்னமே மீனாட்சியை இவர் வேண்டிக்கொண்டபடி, தம் காசரோகம் அங்கு நீங்கியதாகவும், அதுபற்றி இவர் நேர்ந்துகொண்டபடி கட்டிடங்கள் முடிப்பதற்காகவே மதுரையில் தங்கினதாகவும், பிறகு அந்நகரையேவாசஸ்தானமாக ஏற்படுத்திக்கொண்டதாகவும் பூர்வீக சரித்திரங்களால் அறிகிறோம்.

திருமலே தம் முன்னேர்களேப்போல் விஜயநகரத்தரச ருக்குக் கப்பம் கட்டாமல் சுயேச்சையாய் நாட்டை ஆள ஆரம்பிக்கவே, ரேங்கராஜர் என்ற அவ்விஜயநகர அரசர் திரு மலேயை எதிர்த்தார். திருமலே தஞ்சாவூர் செஞ்சி அரசர் களேத் தம்மோடு சேர்த்துக்கொண்டு, ரெங்கராஜரை எதிர்த் தார். ரெங்கராஜர் அவர்கள் மூவரையும் ஒன்றுசேர ஒட்டா மற் செய்து, திருமலேயைச் சங்கடத்திற்கு உட்படுத்தினர். பின்னர் திருமலேநாயக்கர் கோல்கோண்டா சுல்தானிடம் சொல்லி ரெங்கராஜரை எதிர்க்கும்படி செய்தார். அச் சுபே தார்வடபாகத்திலிருந்து விஜயநகர ராஜ்யத்தை எதிர்க்கவே, ரெங்கராஜ் தம் நாட்டைக் காப்பாற்றுவதற்காகத் திருமலே யோடு செய்யவந்த சண்டையை நிறுத்திவிட்டு, வடக்கே போகவேண்டியதாயிற்று கோல்கோண்டா சுல்தானுடன் செய்த சண்டையில் ரேங்குராஜர் தோற்றுப்போகவே, அச் சுபேதார் செஞ்சி, தஞ்சாவூர்க் கோட்டைகளேக் கைப்பற்றிக் கொண்டு; திருமலேயை எதிர்த்தான். திருமலே அவனே எதிர்க் கச் சக்தியற்றவராய்ப் பீஜப்பூர் சுல்தானிடம் சொல்லிக் கோல்கொண்டா சுல்தானே எதிர்க்கச் செய்தார்.

அந்த இரண்டுபேரும் ஒன்று சேர்ந்து கொண்டு திரு மலேயைத்திண்டாடவிட்டார்கள். கடைசியில்திருமலேஏராள மான திரவியத்தைக் கொடுத்து, முகம்மதியர்களேத் திரும்ப அனுப்பினர்.இதற்குள்விஜயநகரத்தரசரும்தம்படைகளேத் திரட்டினர். மைசூர் நாயக்கர் திருமலேயைப் போலல்லாமல் ராஜபக்தி உடையவராதலால், ரெங்கராஜருக்கு வேண்டிய உதவிசெய்தார். அதற்காகத்திருமலே,முகமதிய சுபேதாரை அழைத்து, மைசூரை எதிர்க்கச் சொன்னர். அச்சுபேதார்

எதிர்த்து, அவ்வூரைக் கொள்ளை அடித்துக்கொண்டு, திரும்பிவந்து மதுரையை நிர்மூலம்ஆக்க ஆரம்பித்தான். உடனே திருமலை அவனுக்கு ஏராளமான பணத்தைக்கொடுத்து, நல்ல வார்த்தையால் சமாதானப்படுத்திப் போகச்சொன்னார். முகம்மதியர் வடக்கேபோகவே, தம்மேல் படையெடுக்கச் சொல்லியதற்காக மைசூர் நாயக்கர் பெரிய சேனையோடுவந்து, திருமலையை எதிர்த்தார். திருமலையால் எக்காரியமும் செய்யமுடியவில்லை. கடைசியில் அவர் சேதுபதிக்குக் கடிதம் எழுதி அவரைத் தமக்கு உதவிசெய்ய வேண்டினார். சேதுபதி, உடனே பெரும் சேனையுடன் வந்து மைசூர் சேனையைத் தாராபுரம்வரை, துரத்தித் துரத்தியடித்தார். பிறகு திருமலை தம்பியைப் பெரும்சேனையோடு மைசூரை எதிர்க்க அனுப்பினார். அவ் இளவரசர் மைசூரை அடைந்து அவ்வரசனுடைய மூக்கை அறுத்துக்கொண்டு, தமது வெற்றியைத் தெரிவிக்க மதுரைக்கு வருமுன், திருமலை இறந்துபோனார். கிறிஸ்தவர் தம்மதக்கோவிலை மதுரையிற்கட்டிக்கொள்ளவும், கிறிஸ்தவமதத்தை இந்நாட்டில் பரவச்செய்யவும் இடங்கொடுத்ததால், இவர் கொல்லப்பட்டாரென்று சொல்லிக்கொள்ளப்படுகிறது.

திருமலை, கட்டிடங்களிலும் அநாவசியமான சண்டைகளிலும் பணத்தை மிதமிஞ்சிச் செலவிட்டதால், பின் அரசர்களுக்குப் பணம் கையில் இல்லாமற்போயிற்று. ஆகவே அவர்கள் தம் நாட்டை விரோதிகளுக்கு ஒப்புக்கொடுக்க நேர்ந்தது.

## சொக்கநாத நாயக்கர்.

திருமலைக்கு பின் அவர் குமாரர் சொற்பகாலம் ஆண்டார். அவர் திடீரென்று இறந்துபோக, அவர்மகன் சொக்க

நாத நாயக்கர் பட்டத்திற்கு வந்தார். அவர் அரசரானபோது அவருக்கு வயது பதினாறு. அவர் காலத்தில் மைசூர் அரசர் மதுரையை எதிர்த்தார். சொக்கநாதர் தஞ்சாவூர் மகாராஷ்டிரரைத் தம்மோடுசேர்த்துக்கொண்டு அவ்வரசரைத்துரத்திவிட்டார். பிறகு மகாராஷ்டிரர்களே திருச்சிராப்பள்ளியை எதிர்த்தார்கள். பணமில்லாத சமயத்தில் திடீரெனத் தம் சினேகிதர்களே தம்மோடு எதிர்த்த வருத்தத்தால், அவர் இறந்தாரென்று தெரிகிறது. இவரே மதுரையில் திருமலை கட்டிய சில கட்டிடங்களை இடித்து, அப்பொருளைக்கொண்டு திருச்சியில் கட்டிடம்கட்டி, அங்கு வசித்தனர். இவர் இறந்தபோது, அக்காலத்திலிருந்த மற்ற ராணிகளைப்போல், இவர் மனைவி மங்கம்மாள் உடன்கட்டைஏறுமல்இருந்துவிட்டாள்.

## மங்கம்மாள்.

சொக்கநாதருக்குப் பிறகு, அவர் மகன் ராமகிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் நாட்டை ஆண்டார். அவர் தம் பட்டத்துக்கு வந்ததும், தகப்பன் இழந்த கோட்டையை விரோதிகளிடமிருந்து கைப்பற்றினர். அவர் திடீரென்று சாக, அவர் மனைவியும் ஒரு ஆண் குழந்தையைப் பெற்றுவிட்டு இறந்தாள். அக்குழந்தையாகிய விஜயரெங்க சொக்கநாதனுக்குத் தக்கவயது வரும்வரை அவனுடைய பாட்டியும் சொக்கநாதநாயக்கரின் மனைவியுமாகிய மங்கம்மாள் சுமார் 16-வருஷ வரை நாட்டை ஆண்டனள்.

அவள் அரசியாய் இருந்தபோது நாட்டை மிகவும் நன்றாய் ஆண்டாள். அவள் பெண்பிள்ளையானாலும் நாட்டில் சமாதானத்தை நிலைநாட்டினாள். அவள் நாட்டிற்குச் செய்த நன்மைகள் இவ்வளவு அவ்வளவு அல்ல. பல ஊர்களில் யாத்

திரிகர்களுக்கு அன்னதானம் நடக்கும்படி சத்திரங்கள் கட்டினுள். இவற்றைத்தவிர மதுரையிலிருந்து இப்போது 4 திக்குகளிலும் பிரிந்துபோகும் சாலேகளே ஏற்படுத்தினுள். அச்சாலேகள் வழியே நடந்து போகும் பிரயாணிகள் இப்போது மங்கம்மாளேயும் அவள் தருமத்தையும் நினேக்கிருர்கள். இன்னும் பலவூர்களிலும், ரஸ்தாக்களிலும் தண்ணீர்ப் பந்தல்களே ஏற்படுத்தினுள்.

தன் பேரனுக்குத் தக்கபருவம் வந்தவுடன், அவனிடம் நாட்டை ஒப்புவித்துவிட்டு, மதுரைக்குப் போய் தன் அரண்மனேயில் வாழ்ந்திருந்தாள். அவள் அரண்மனே இப்போதுள்ள அந்திக்கடைப்பொட்டலின் வடபாகத்தில் இருந்தது. இப்போதுள்ள சென்ட்ரல் மார்க்கட்டும், முனிசிபல் பிராஞ்சு ஆஸ்பத்திரியும், மதுரைக்காலேஜ் 3-வது பிரிவும், இன்கம்டாக்ஸ் கச்சேரியும் அவளது அரண்மனேயின் பாகங்களே.

விஜயரங்க சொக்கநாதநாயக்கர்:—இவர் 26—வருஷங்கள் ஆண்டார். இவர் தமது தலேநகரில் தங்காமல் பல யாத்திரை ஸ்தங்களுக்குச் சென்று, பணத்தை வீணில் ஏராளமாகச் செலவு செய்தார். இவர் சந்ததி இல்லாமல் இறக்கவே, இவருடைய மனேவி மீனுட்சி ஒரு பையனே ஸ்வீகாரப் புத்திரனுக எடுத்துக்கொண்டாள்.

மீனுட்சி அம்மாள்—இவள் 5-வருஷ காலம் ஆண்டாள். இதற்குள் இவளுடைய ஸ்வீகாரப் புத்திரனுடைய தகப்பனுகிய பங்காரு திருமலே தன் பிள்ளேக்குப் பதிலாகத் தானே ஆளவேண்டும் என்றுன். மீனுட்சி அதற்குச் சம்மதிக்கவில்லே. கடைசியில் இருவரும் கர்நாடக நவாப் இடம்தெரி

வித்தார்கள். அவர் தமது தளகர்த்தன் சந்தா சாகிப்பையும், தம் பிள்ளையையும் அனுப்பி, நியாயம் செலுத்தச்சொன்னார். நவாப்பின் பிள்ளை பங்காருவை ஆளும்படி ஏற்பாடு செய்து, ஊருக்குத் திரும்புகையில், நாட்டைப் பாதுகாக்கும்படி சந்தா சாகிப்பிடம்சொன்னார். சந்தா சாகிப் மீனாட்சியிடம் பணம் பெற்று, மதுரைக்குப்போய்ப் பங்காருவைத் துரத்திவிட்டும், நாட்டைத் தன் தம்பி யொருவனிடம் ஒப்பிவித்துவிட்டுத், திருச்சிக்கு வந்து, மீனாட்சியைச் சிறைப்படுத்தியும் சென்றான். தன் வெற்றியைத் திண்டுக்கல் குன்றில் தான் கட்டிய கட்டிடங்களில் எழுதியிருக்கிறான். சிறையிலிருந்து மீனாட்சி தற்கொலை செய்து கொண்டாள்.

இதற்கு 4-வருஷத்திற்குப் பிறகு, மகாராஷ்டிரர்கள் முகம்மதியர்களிடமிருந்து இந்நாட்டைக் கைபற்றினார்கள். அக்காலத்தில் ஆற்காடு நவாப் பட்டத்தைக் குறித்து விவாதங்கள் நடந்தன. அப்பட்டத்திற்கு ஏற்பட்ட இருவரில் ஒருவர் இங்கிலீஷ்காரர் இடத்திலும், மற்றொருவர் பிரஞ்சுக்காரர் இடத்திலும் உதவி வேண்டினார்கள். கடைசியில் இங்கிலீஷ்காரர் உதவிசெய்ய முகம்மதாலி கர்னாடக நவாப்ஆனார்.

முகம்மதாலியும் இங்கிலீஷ்காரரும், கான்சா என்ற முகம்மதியரை மதுரை நாட்டிற்குக் கவர்னராக்கினார்கள். இவர் முதலில் நல்லவராய் இருந்தாலும், வரவரத் தம் மேலதிகாரிகளை எதிர்த்ததால், இங்கிலீஷ்காரர்கள் இவரைத் தம் கையில் அகப்படச்செய்து கொன்று, அவர் சவத்தை மதுரையின் மேற்கே வைகையாற்றின் தென்கரையில் சமாதி வைத்துப் பள்ளிவாசலும் கட்டினார்கள்.

முகம்மதாலி கர்னுடக நவாப் ஆன சிறிது காலத்திற்குள் மைசூர் ஹைதர் ஆலி அவரை எதிர்த்தான். அப்போது இங்கிலீஷ்காரர்கள் முகம்மதாலிக்கு உதவிசெய்தார்கள்.

அவர்களுக்கு நேர்ந்த செலவுக்காகச் சேலம் மதுரை முதலியவற்றின் வருமானத்தை வசூல் செய்துகொள்ளும்படி அவர் அவர்களுக்கு உத்தரவு செய்தார். அன்று முதல் ஈஸ்டு இந்தியா கம்பெனியார் நம்மை ஆண்டார்கள். அவர்களைத்தான் நம்மவர்களிற் சிலர் கும்பினியார் என்று சொல்லுகிறுர்கள்.

பிறகு பல வருஷங்கள் நவாப் தம் நாட்டைக் கேவலமாக ஆண்டதோடு இங்கிலீஷ்காரரின் விரோதிகளுக்கு உதவியும்செய்தார். கடைசியில் 1801ஹு நவாப் இடமிருந்து அநேகமாய்த் தேன்னிந்தியா முழுதும் இங்கிலீஷ்காரரிடம் வந்தது. அப்பால் கம்பெனியாரிடமிருந்து இந்தியா முழுவதும் நமது கருணை தங்கிய விக்டோரியா மஹாராணி இடம் வந்தது.

## தற்கால அரசியல்.

தற்போது இந்த ஜில்லா மாட்சிமைதங்கிய சக்கரவர்த்தி ஐந்தாவது ஜார்ஜ் மன்னரின் அரசாட்சிக்குள் இருக்கிறது. அவர் இங்கிருந்து 5000 மைலுக்கு அப்பாலுள்ள இங்கிலாந்து தேசத்து லண்டன் மா நகரத்தில் இருக்கிறுர். அவருடைய ஆளுகைக்குள் நமது நாட்டைத் தவிர அநேக நாடுகள் எல்லாக்கண்டங்களிலும் இருக்கின்றன. இந்த எல்லா நாட்டையும் அரசர் நேராக ஆளுவது சிரமமாய் இருக்கும்.

ஆகையால் தமக்குப் பிரதிநிதிகளை ஆங்காங்கு நியமித்து இருக்கிறார். நமது நாட்டுப்பிரதிநிதியின் பெயர் லார்டு வில் லிங்டன். இவர் டில்லியில் வசிக்கிறார். இவருக்குட்பட்டிருக் கும்ஒவ்வொருராஜதானிக்கும் ஒவ்வொருகவர்னர்நியமிக்கப் பட்டிருக்கிறார். நமது ராஜதானியின் கவர்னர் ஸர் ஜார்ஜ் பிர டிரிக் ஸ்டேன்லி என்பவர். ஒவ்வொரு ராஜதானியும் பல ஜில்லாக்களாகப்பிரிக்கப்பட்டு, கலெக்டர் என்பவரால் ஆளப் படுகிறது. ஆகவே இப்பொழுது நமது ஜில்லாவின் கலெக் டர், அதன் சமாதானம், வரி, நியாயம் முதலியவற்றிற்குப் பொறுப்பாளியாவர்.

ஜமீன் பாகங்களில், நிலவரிக்கு ஜமீன்தார்களே சுதந் திரவாளிகள் ஆவார்கள். அவர்கள் ஆங்கில ராஜாங்கத்தா ருக்குக் கப்பம் கட்டுகிறார்கள். ஜமீனில்லாத அயன் கிரா மங்களில் ராஜாங்கத்தாரே நேராக வசூல்செய்து கொள்ளு கிறார்கள். இவ் எல்லாப் பாகங்களில் ஸிவில் கிரிமினல் நியாயங்கள் முதலிய சகல அதிகாரங்களும் நமது ராஜாங் கத்தாரிடமே இருக்கின்றன.

கலெக்டருக்கு ரெவினியூ வசூல் செய்வதில் உதவிபுரி வதற்கு ஸப் கலெக்டர், டிப்டி கலெக்டர், தாசில்தார் (அல் லது டிப்டி தாசில்தார்) ரெவினியூ இன்ஸ்பெக்டர், கிராமா திகாரி, கர்ணம் முதலிய உத்தியோகஸ்தர்கள் நியமிக்கப் பட்டிருக்கிறார்கள். தாசில்தாரே ஒவ்வொரு தாலூகாவிலும் ரெவினியூ வசூல் செய்வதற்குத் தலைமை அதிகாரி. அத் தாசில்தார்களுக்கு மேலாக ஜில்லாகலெக்டருக்கு உதவி யாக இந்த ஜில்லாவிற்கு 4 டிவிஷனல் ஆபீஸர்கள் நியமிக் கப்பட்டிருக்கிறார்கள்.

திண்டுக்கல் சப்கலெக்டர்—இவரது டிவிஷனைச் சேர்ந்தவை திண்டுக்கல், பழநி, கொடைக்கானல், நிலக்கோட்டை தாலூகாக்கள். உசிலம்பட்டி டிவிஷன் டிப்டி கலெக்டர்—திருமங்கலம், பெரியகுளம் தாலூகாக்கள் மேலூர் விடிஷன் டிப்டி கலெக்டர்—இவர் டிவிஷனுக்குச்சேர்ந்தவை மதுரை, மேலூர்த்தாலூகாக்களே. மதுரைடவுனுக்குப் பிரத்தியேகமான ஒரு டிவிஷனல் ஆபீஸர் இருக்கிறார். அவர்களில் கலெக்டர், டிப்டி கலெக்டர், கிராமாதிகாரிகளாகிய இவர்களுக்குக் கிரிமினல் அதிகாரம் (அதாவது குற்றவாளிகளைத் தண்டிக்கும் அதிகாரம்) உண்டு. ஜில்லாவுக்குத் தலைவர் கலெக்டர். ஆனாலும் அவருக்கு உதவியாகக் கீழே சொல்லும் டிபார்டு மெண்டுகள் ஏற்பட்டிருக்கின்றன.

1. நியாய பரிபாலன இலாகா—இது ஜில்லாவில் நடக்கும் ஸிவில் விவகாரங்களையும் கிரிமினில் குற்றங்களையும் விசாரித்து நியாயத்தை நிலைநிறுத்துவது. (2) போலீஸ் இலாகா ஜனங்கள் ராஜாங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்ட சட்டங்களைச் சரியாகக்கவனிக்கிறார்களாஎன்று பார்ப்பதும்வலியோர் மெலியோரைத் தொந்தரவுசெய்யாமல் கவனிப்பதும் திருட்டு, கொலை, களவு, ராஜத்துரோகம் முதலிய குற்றங்கள் நடவாமல், காப்பதும், பெருங்கூட்டங்களில் சச்சரவுகள் நடவாமல் கவனிப்பதும் கஜனாவைக் காப்பதும் இந்த டிபார்ட்மெண்டின் வேலைகள். (3) படிப்புஇலாகா—ஜில்லாவிலுள்ள பலநகரங்களிலும் கிராமங்களிலும் அநேக பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. அவைகளுக்கு ராஜாங்கத்தார் ஏராளமான பணத்தைக் கொடுத்துப் படிப்பை விருத்தி செய்கிறார்கள். இந்த இலாகாவைச்சேர்ந்த ஜில்லா இன்ஸ்பெக்டர்முதலியோர் அடிக்கடிபள்ளிக்கூடங்களுக்குப்போய்

எப்படிப் பாடங்களைக் கற்பிக்கவேண்டும் என்பதைக் காட்டுவதோடு அந்தப்பள்ளிக்கூடத்தில் படிப்புச் சொல்லிக் கொடுப்பதற்குத் தக்கபடி கிராண்டுகளும் கொடுப்பார்கள். (4) தந்தி தபால் இலாகா-வெளி ஊர்களிலிருந்துவரும் தந்தி, கடிதங்களைக் கொடுக்கவேண்டியவர்களுக்குக் கொடுக்கவும், இங்கிருந்து அனுப்பவேண்டியவைகளைக் குறித்த இடங்களுக்கு அனுப்பவும், இந்த இலாகா ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. கடிதங்களைத் தவிரப் பணம், புத்தகம், துணிமணிகள் முதலியவற்றையும் தபால்சாலைகள் மூலமாய் அனுப்ப வேண்டியவர்களுக்கு அனுப்பலாம். பணம் கையில் கிடைத்தபோது இந்த இலாக்காவைச் சேர்ந்த சேவிங்ஸ் பாங்கில் போட்டால், வட்டியுடன் மோசமில்லாமல் வேண்டியபோது பெறலாம். (5) போதுஜன உபகார இலாகா—(Public Works Department) வண்டிகள் முதலியன செல்லும்படி சாலைகளைச் சீர் படுத்துவதும், புதிதாய்ப் பாதைகளை ஏற்படுத்துவதும், சத்திரம்சாவடிகளை ஒழுங்கு செய்வதும், நீர்ப்பாய்ச்சலுக்கு வேண்டியன செய்வதும் இதன் கடமைகளாகும். (6) சுகாதார இலாகா—ஜில்லா வாசிகள் வியாதியால் கஷ்டப்பட்டால் அதைத் தீர்ப்பதற்கும், வியாதி வராமல் காப்பதற்கும் இந்த இலாகா ஏற்பட்டிருக்கிறது. (7) காட்டு இலாகா—மலை முதலிய இடங்களிலுள்ள மரங்களைக் காப்பாற்றிக் காட்டைச் சீர்திருத்துதற்காக இந்த இலாகா ஏற்பட்டிருக்கிறது.

இந்த ஒவ்வொரு இலாகாவுக்கும் ஜில்லா கஜானாவிலிருந்து மாதாமாதம் பணம் கொடுக்கப்படுகிறது. கவர்ன்மெண்டு உத்தியோகத்திலிருந்து பிற்பாடு வயதுசென்று வேலை பார்க்க முடியாத கிழவர்கள் பேன்ஷன் என்னும்

உபகாரச்சம்பளம் பெறுகிறார்கள். ஒவ்வொரு இலாகாவுக்கும் மேலான அதிகாரிகள் சென்னையில் இருக்கிறார்கள். அவர்கள் அந்தந்த இலாகாவின்விஷயங்களை நமதுசென்னை கவர்னருக்குத்தெரிவிக்கிறார்கள். அவர் அவைகளைப்பெருமையும், கருணையும் தங்கிய நமது ஐந்தாவது ஜார்ஜ் சக்கரவர்த்தியார் நியமித்த இந்திய அரசாங்கக் காரியதரிசிக்குத் தெரியப்படுத்துகிறார். அவர் பார்த்து நமக்கு வேண்டிய நன்மைகளை அப்போதைக்கப்போது செய்கிறார்.

முற்கூறிய இலாகாக்கள் நமது துரைத்தனத்தாரால் நேரிற் கவனிக்கப்பட்டாலும், சில விஷயங்களில் நமக்குச் சுய ஆட்சி கொடுத்திருக்கிறார்கள். அந்த இலாகாவின் அதிகாரிகள் பழைய ரஸ்தாக்களைப் பாதுகாத்தல் புதிய ரஸ்தாக்களை ஏற்படுத்தல், ஆரம்பக்கல்வியை விருத்திசெய்தல், ஆஸ்பத்திரிகளை வைத்துப் பரிபாலித்தல் முதலிய காரியங்களைக் கவனிக்கிறார்கள். இந்தஜில்லாவின் சுயஆட்சி சபைக்கு மதுரை ஜில்லா போர்டு என்றும் பெயர். அந்தப் போர்டின் தலைமை அதிகாரிக்கு ஜில்லாபோர்டு பிரஸிடேன்ட் என்று பெயர். ஜில்லாபோர்டு அங்கத்தினர், அந்த ஜில்லாவில் வரி கொடுக்கிறவர்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். ஜில்லா போர்டு அங்கத்தினர் ஜில்லா போர்டு பிரஸிடெண்டைத் தேர்ந்தெடுக்கிறார்கள்.

பெரிய நகரங்களில் முனிசிபாலிடிகள்உள்ளன. அதற்கு முனிசிபல் சபை உண்டு. அந்தச் சபையின் அங்கத்தினருக்கு முனிசிபல் கவுன்சிலர்கள் என்று பெயர். முனிசிபல் கவுன்சிலர்களை அந்த அந்த நகரங்களில் வரிகொடுக்கிறவர்

களே தேர்ந்தெடுக்கிறார்கள். அந்தக் கவுன்சிலர்கள்ஒன்று சேர்ந்து, அந்தச் சபையிலிருந்து, ஒரு சேர்மெனைத் தேர்ந்தெடுக்கிறார்கள். ஜில்லாபோர்டு செய்யும் எல்லாவேலைகளையும் முனிசிபாலிடிகளும் அந்த அந்த நகரங்களிற் செய்கின்றன. முனிசிபாலிடியானது ஜில்லா போர்டின் அதிகாரத்துக்கு உட்பட்டதன்று.

இங்ஙனம் நமக்குப் பல உரிமைகளைத்தந்து, நீதியுடனும் அன்புடனும் பெற்றோரைப்போல் நம்மைப் பாதுகாத்து வருகின்ற நமது சக்கரவர்த்தியையும், சக்கரவர்த்தினியையும், ஆங்கில அரசாட்சியையும் மனங்களித்து வாழ்த்துவோமாக.





# ஜில்லா பூகோள வர்க்கம்.

இவை, பசுமலை உயர்தர கலாசாலை, போதனு முறைக் கலாசாலைகளின் உதவி ஆசிரியர் ஸ்ரீமத் நே. ரா. சுப்பிரமணிய சர்மா அவர்களால் எழுதப் பெற்றன. வித்தியா விதிகளை அனுசரித்துப் புதிய முறையில் இலகுவான நடையில் இவை தெளிவாக எழுதப்பெற்றுள் ளன; தமிழ் நாடு முழுவதும் பாராட்டப்பட்டு வருகின்றன.

| | | | |
|---|---|---|---|
| மதுரை ஜில்லா பூகோள சாஸ்திரம் | | 5 | அணு |
| இராமநாதபுரம் ஜில்லா | ஷை | 5 | ,, |
| திருநெல்வேலி ஜில்லா | ஷை | 5 | ,, |
| திருச்சிராப்பள்ளி ஜில்லா | ஷை | 5 | ,, |
| தஞ்சாவூர் ஜில்லா | ஷை | 5 | ,, |
| சேலம் ஜில்லா | ஷை | 5 | ,, |
| கோயம்புத்தூர் ஜில்லா | ஷை | 5 | ,, |
| வட ஆற்காடு ஜில்லா | ஷை | 5 | ,, |
| தென் ஆற்காடு ஜில்லா | ஷை | 5 | ,, |
| செங்கற்பட்டு ஜில்லா | ஷை | 5 | ,, |

பூகோள சாஸ்திரத்தின் முடிவில் அந்தந்த ஜில்லாவின் சரித்திரமும் அரசியலும் சேர்க்கப் பெற்றுள்ளன. இதர ஜில்லாக்களின் பூகோள சாஸ்திரமும் விரைவில் வெளிவரும்.

இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்,

ஸ்ரீ கோபால் மஹால், மதுரை.
158-A, பிராட்வே, சென்னை.